உ
கணபதி துணை.
திருச்சிற்றம்பலம்



# திருச்சுழியல் தல வரலாறு





எழுதியவர் :
தி. சு. கோவிந்த சுவாமி
திருச்சுழியல





விலை 0-75

# “சைவ சித்தாந்த சபைகள் அமைக்க வேண்டுகோள்”

பேரன்புடையீர்,

“சிவாலயந் தோறும் மக்களுக்குச் சைவ சமயத்தைத் தேச மொழிகளிலே போதித்தல் வேண்டும்” என்று காமிக ஆகமத்திலே சிவபெருமானுல் விதிக்கப்பட்டிருக்கின்றது. இதைச் செயல்படுத்த வேண்டியது ஜகத் குருக்களாகவும் பரமாசாரியர்களாகவும் உள்ள சிவாலய பூசகர்ளாகிய சிவாசாரியர்கள் கடமையாகும். ஏன் ? “சைவாகம போதனைக்கு சிவாசாரியர்களே அதிகாரிகள்” என்றும் ஆகமத்தில் விதிக்கப்பட்டிருக்கின்றது. சிவாசாரியர்கள் தங்கள் தங்கள் ஆலயத்தில் ஒரு சுபதினத்தில் உடனடியாக “சைவ சித்தாந்த சபை” அமைத்தல் வேண்டும். ஒரு தலைவர், உபதலைவர், செயலாளர், உதவிச் செயலாளர், பொருளாளர் நிருவாக உறுப்பினர் ஐந்துபேர் ஆகத் தேர்ந் தெடுத்து ஷை சபை அமைக்கப்பட்ட உடனே ஷை ஆகம வாக்கியத்தை காட்டிச் செயல்படுத்த அமைக்கப்பட்டதாக பத்திரிகைகட்கும், எங்களுக் கும் தெரிவிக்குமாறு வேண்டுகின்றோம். உணர்ச்சியுடைய ஒரு சிவா சாரியர் வழிகாட்டினுல் பத்திரிகை வாயிலாகப் பார்த்து எல்லாச் சிவா லயங்களிலும் அமைத்துவிட வழிகாட்டியாக உதவும். ராப்பர் 3-ம் பக்கத் தில் கண்ட நூல்களை வாங்கி வாரத்தில் ஒரு நாள் போதிக்க ஏற்பாடு செய் தல் வேண்டும். ஷை நூல்களை யாவரும் வாங்க வேண்டும். ஆலயத்தில் ஷை நூல்களை விற்பனைக்குக் கிடைக்கும்படி வைத்தல்வேண்டும். இதர விபரங்கட்கு அஞ்சல் தலை அனுப்பித் தெரிந்துகொள்ள கோருகிறோம்.

அன்புள்ள,

தெற்காடி வீதி,
ஸ்ரீ மீனுட்சி சுந்தரர் திருக்கோவில்.

சைவ சித்தாந்த சபையார்.
மதுரை—1.

உ
கணபதி துணை
திருச்சிற்றம்பலம்



# திருச்சுழியல் தல வரலாறு



—: எழுதியவர் :—
தி. சு. கோவிந்தசுவாமி
திருச்சுழியல்

1968 வெளியீடு






விலை 0—75

திருச்சுழியல் தல வரலாறு
முதற் பதிப்பு — 500 படிகள்
ஆசிரியர்: தி. சு. கோவிந்தசுவாமி
வெளியீடு — 1968.

—; கிடைக்குமிடங்கள் :—

1. கைலாசசுந்தரம் பிள்ளை
தானக்கணக்கு மிராசுதார்
திருச்சுழியல் கோவில்
திருச்சுழி P. O.

2. கு. முத்தையா பிள்ளை
ஜவுளி வியாபாரம்
கடைத் தெரு
திருச்சுழி P. O.

3. சைவ சித்தாந்த சபை
தெற்காடி வீதி
ஸ்ரீ மீனாட்சிசுந்தரர் திருக்கோயில்
மதுரை—1.

79-3

உ
கணபதி துணை
சிவமயம்

# முன்னுரை

நிறை குணத்தினன் சுழியலைக் கருத்துற நினைக்கப்
பிறை முடிப்பிரான் சுழியலென் றொருதரம் பேசக்
கறைமிடற்றினன் சுழியலைக் கண்ணுறக் காண
மறை யிரைக்குமே சிவபதந் தருமென மகிழ்ந்து — தலபுராணம்

திருச்சுழியல் வாசியாகிய சிறியேன் யானறிந்த தல வரலாற்றை ஒரு நூல் வடிவாக வெளியிடவேண்டும் என்னும் அவாவால் வெளியிட்டுள்ளேன். எனது ஆப்த நண்பர் சைவப் பெரியார் சென்னை. தணிகைமணி திரு வ.சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் எழுதித்தந்த திருச்சுழியற் பதிக உரையை இத்துடன் சேர்த்துள்ளேன். மற்றும் கல்வெட்டு இலாகாவினர் கொடுத்த குறிப்புக்களையும் சேர்த்துள்ளேன். இந்நூலுக்கு சிறப்புப்பாயிரம் தந்த சிவஸ்ரீ கர்ப்பூரசுந்தர சிவாசாரிய சுவாமிகட்கும் எனது ஆப்த நண்பர் – பெரியார் – பாலகவி இராமநாதன் செட்டியார், அவர்கட்கும் மதுரைத்தல ஓதுவார்வித்வான் திரு. தா. குருசாமி அவர்கட்கும், பதிக உரை எழுதிய தணிகை மணியவர்கட்கும், கல்வெட்டு இலாகாவினருக்கும், விஷயங்களை தொகுப்பதில் உடனிருந்து உதவிய ஸ்ரீ பண்டாரக்கணக்கு திரு. கல்யாண சுந்தரம் பிள்ளையவர்கட்கும் நன்றி தெரிவித்துக் கொள்கின்றேன், விரைவில் அச்சிட்டமையால் இதிற்காணும் பிழைகளைப் பொறுத்தருளுமாறு அறிஞர்களை வேண்டுகிறேன். அடுத்து இதனைப் புதுக்கியும் விரித்தும் எழுதி வெளியிட எண்ணியுள்ளேன்.

இந்நூலை விரைவில் அச்சிட்டுத்தந்த மதுரை விஜயா அச்சக உரிமையாளர் திரு. கே. ராமன் அவர்கட்கும் என் நன்றி. எல்லாவற்றிற்கும் அருள்புரிந்த எனது ஆன்மநாயகராகிய திருமேனிப் பெருமானை மனமொழி மெய்யால் இறைஞ்சுகின்றேன்.

திங்கள் மும்மாரி பெய்யப் புரவலர் செங்கோ லோங்க
மங்கையர் கற்பு நீட மாநிலஞ் செழித்து வாழ்கப்
புங்கவர் கருணை கூரப் பூசுரர் சுருதி பொங்கச்
சங்கரன் றிருவெண் ணீறுஞ் சைவமுந் தழைக்க மாதோ!

மதுரை
16—7—67

தி. சு. கோவிந்தசாமி
திருச்சுழியல்

உ

சிவமயம்

திருச்சுழியல், மதுரை முதலிய கோயில்களின் ஸ்தானிகரும், மதுரைச் சைவசித்தாந்தசபைத் தலைவருமான

சிவ ஸ்ரீ கர்ப்பூரசுந்தர சிவாசாரிய சுவாமிகள்

# வாழ்த்துரை

நால்வகையோனிகளுள் ஒரு யோனிவாய்ப்பட்டு பிறப்பனவை யாவை அவையெல்லாம் பசுக்கள். அப்படிப் பிறத்தலில்லாதது யாது அது பதிப்பொருள். இதுவொன்றே எளிதில் அவ்விரண்டுக்கும் தம்முள் வேற்றுமை அறியும் வண்ணம் நிற்பது. ஆதலால் வேதம் புராணம் இதிகாசம் முதலிய நூல்களிலே மற்றைத் தேவர்களெல்லாம் அப்படிப் பிறந்திறத்தல் சொல்லப்படுதலாலும், சிவபெருமானுக்கு அது உண்டென்பது எங்காயினும் சொல்லப்படாமையாலும் அநாதிமுத்த சித்துருவாகிய முழுமுதற்கடவுள் சிவபெருமானே என்பது தெள்ளிதிற்றுணியப்படும்.

இப்படித் துணியப்படும் முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாகிய சிவபெருமானை வேதசிவாகம விதிப்படி மெய்யன்போடு வழிபடுவோர் சைவ சமயிகள் என்றும், சிவனடியார்கள் என்றும் சொல்லப்படுவார்கள். இச்சைவர்கள் பல சமயத்தார்க்கும் பொதுவகையால் வேண்டப்படும் இலக்கணங்களை முன்னே வழுவாது தழுவிக்கொண்டே பின்பு தங்களுக்குச் சிறப்புவகையால் வேண்டப்படும் இலக்கணங்களை உடையர்களாய் ஒழுகல் வேண்டும். சிவனடியார் இலக்கணம் இருபத்துமூன்று. சிவபுராணங் கேட்டல் என்பது அவற்றுள் ஒன்று. சிவபுராணங்கேட்டல் தான் ஓரிலக்கணமாய் நிற்றலின்றி மற்றைப் பொதுவிலக் கணங்களையும் சிறப்பிலக்கணங்களையும் நமக்கு வருவித்தற்கு கருவியாயும் நிற்றலுடையது. எதனாலெனின், விபூதிருத்திராக்ஷதாரணம் முதலிய புண்ணியங்களையும் அவற்றின் பயனாகிய இன்பத்தையும் கொலை முதலிய பாவங்களையும் அவற்றின் பயனாகியது துன்பத்தையும். அறிவிப்பது சிவபுராணமாகலி னென்க. ஆதலால் சைவ சமயிகள் யாவரும் சிவபுராணங் கேட்டல் வேண்டுமென்பது துணிவு. இனம் பற்றிச் சிவத்தல புராணங்களும் கொள்ளப்படும்.

தலபுராணங்கள் அவ்வத்தலத்து மகிமைகளையும் வரலாற்று உண்மைகளையும் தெரிந்து வழிபடுவதற்கு கருவியாயுள்ளன. இங்ஙனமாக மகாஸ்காந்தபுராணத்து க்ஷேத்திரக்காண்டத்திலே சொல்லப்பெற்றது திருச்சுழியல் என்னும் திவ்ய தலபுராணமாகும். வடமொழியிலே திரிசூலபுர மகாத்மியம் என்ற நூலும் அதன் மொழிபெயர்ப்பு நூலும் உள்ளன.

திருச்சுழியற்கோவில் தானக்கணக்கு பரம்பரையினரும், சிவபத்தி, சிவனடியார் பத்தியிற் சிறந்தவரும், திருச்சுழியற்பெருமானை ஆன்மார்த்தமாக பூசித்து வருபவரும், மதுரைச் சைவசித்தாந்த சபைச் செயலாளராக இருந்து சிவத்தொண்டு செய்பவருமாகிய தி. சு. கோவிந்தசுவாமியவர்கள் "திருச்சுழியல் தலவரலாறு" என்ற உரைநடைநூலை வெளியிட்டுள்ளார். இவர் வடமொழித்தலபுராண மொழிபெயர்ப்பு தமிழ்ப்புராணம் முதலிய தல சம்பந்தமான நூல்களை நன்கு பயின்றும், எனது தந்தையாரும் சிவாகம பண்டிதராயும் விளங்கிய செல்லபட்டர் என்ற ஸ்ரீக. தெய்வசிகாமணி பட்டரவர்கள் பால் நன்கு கேட்டறிந்த பழமையான செய்திகளையும் தொகுத்து வெளியிட்டுள்ளமை பாராட்டத்தக்கது. சிவ அன்பர்கள் இந்நூலைப் பெற்று ஓதிப் பயன் பெறுவார்களாக! இந்நூலாசிரியருக்கு நீண்ட வாழ்நாளும், நோயின்றியன்ற யாக்கையும் சகல செல்வ யோகமிக்க பெருவாழ்வும் அருளுமாறு துணைமாலை நாயகி சமேத திருமேனிப் பெருமானை இறைஞ்சி வாழ்த்துகின்றேன்.

மதுரை<br>16—7—67 } தெ. கர்ப்பூரசுந்தர சிவாசாரியர்

---

குறிப்பு :— சிவனடியார் இலக்கணம் பின்வருமாறு :—

பொதுவிலக்கணம் :- கொல்லாமை, புலாலுண்ணாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை, பிறர்மனை நயவாமை, வரைவின் மகளிர் நயவாமை; இரக்கம், வாய்மை, பொறை, அடக்கம், கொடை, தாய்தந்தை முதலிய பெரியோரை வழிபடுதல் முதலியவை. இந்நன்மைகளில்லாத கிரியை ஞானங்கள் பயன்படா.

புறத்திலக்கணம்பத்து :- விபூதி உருத்திராக்ஷம் என்னும் சிவ சின்னங்களைத் தரித்தல், குருவை வழிபடல், சிவபெருமானைத் தோத்திரஞ் செய்தல், சிவநாமங்களை உச்சரித்தல், சிவ பெருமானைப் பூசை செய்தல், சிவதருமங்களைச் செய்தல், சிவபுராணங்களைக் கேட்டல், சிவாலய தரிசனஞ் செய்தல், சிவனடியாரிடத்தன்றிப் போசனம் பண்ணாமை, சிவனடியார்கட்குக் கொடுத்தல் என்பன.

உடலிலக்கணம் பத்து :- சிவபெருமானுடைய பெருமையைச் சிந்திக்குந்தோறும் பேசுந்தோறும் கண்டம் விம்முதல், நாக்குத் தடித்தல், உதடு துடித்தல், சரீர நடுங்குதல், உரோமஞ் சிலிர்த்தல், குறுவேர்வை கொள்ளல், நாக்குத் தழுதழுத்தல், ஆனந்தக் கண்ணீர் சொரிதல், வாய்விட்டழுதல், பரவசமாய்த் தன்னை அயர்த்தல் என்பன.

அகத்திலக்கணம் மூன்று :- பஞ்சாக்ஷரத்தை மானதமாகச் செபித்தல், மானதபூசை, சிவபெருமானைத் தன்னோடு பிரிவறக் காண்டல் என்பன; ஆகச் சிவனடியார் இலக்கணம் இருபத்துமூன்று.

உ

சிவமயம்

# சிறப்புப்பாயிரம்

திருமபுர ஆதீன வித்துவான், திருவண்ணாமலை ஆதின விரிவுரையரசு, மதுரை ஆதீனச்சித்தாந்த சைவவித்தகர், சித்தாந்தப்புலவர் மாமணி, பாலகவி வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியாரவர்கள்.

(தத்புருஷ தேசிகர்)

திருமேனி நாதர் திகழும் சுழியற்
பெருமை யுரைநடையிற் பேசி — அருமையுடன்
கோவிந்தசாமி குவலயத்திற் ஈந்து வந்தான்
நாவந்த செந்தமிழில் நன்கு.

உ

சிவமயம்

மதுரை நகரவை உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர்.
மதுரைத் தலத்து ஓதுவார், திருநெறிய தமிழ்மணி,
வித்துவான். திரு. தா. குருசாமி ஓதுவார்
பாடிய சிறப்புப்பாயிரம்.

அருந்தமிழ் புரந்த ஆலவாய்ப் பாண்டிப்
பெருந்தலம் பதினான் கதனிற் சுழியல்
பழமை பெருமை வாய்ந்த நற்பதி
வளமை தங்கிய உரைநடை யதனால்
பழமை கிளந்தும் புதுமை விரித்தும்
கோயிற் ஞானக் கணக்கர் வழிப்படி
ஏய்ந்தநற் செவிவழி கேட்டவை கொண்டு
கற்றல் கேட்டல் உடையார் வழிநின்(று)
இற்றே திருச்சுழி யற்புரா ணந்தனை
மிகுநகை கொண்டு புதுக்கி எழுதினன்,
தகுதியாய்ச் சுருக்கித் தலவர லாரென
வெகுசிவ நேய ஆசா னியாரெனில்
பூசை நாடொறும் புரிந்தே செய்பவன்
ஆசை கொண்டே ஆடி வீதியிற்
சைவசித் தாந்த சபையுங் கண்டவன்,
கைவினை செய்தெம் பிரானடி போற்றுவோன்
ஆகுலச் செயற்கெலாம் அடிமை யிலாதவன்
வாகுடன் சைவ வளர்ச்சியே நினைபவன்
நெஞ்சம் ஈசற் கிடமாய்க் கொண்டோன்
வெஞ்சமர் புரியும் வீரனே போல
சைவ வான்பயிர் காக்கும் வீரன்
மேவிய திருச்சுழி யவிலே பிறந்தவன்
எனக்கும் சிவநெறி காட்டும் வித்தகன்
தனக்கு நிகரிலா சித்தாந் தவித்தகன்
குருலிங் கசங்கம பத்தி யுடையோன்
குருவீ சான தேசிகன் நோக்கால்
சுழியற் றலபுரா ணவர லாற்றைப்
பழிப்பிலா தாக்கிச் சுருக்கித் தந்தனன்
சுழியற் ஞானக் கணக்கர்
வழியினன் கோவிந்தசாமி என்போனே!

மதுரை
13—7—67

இங்ஙனம்
வித்துவான். தா. குருசாமிஓதுவார்.

# உள்ளுரை

கணபதி துணை.
திருச்சிற்றம்பலம்.

# திருச்சுழியல் தல வரலாறு.

—★—

### தல விநாயகர் துதி.

*நீதிக்குஞ்சர நீர்மைய சரமாய்ப்*
*பேதிக்குஞ்சர வாய்ப்புக்கும் பேறதாஞ்*
*சோதிக்குஞ்சரக் கண்ணுமைக் குஞ்சுத*
*போதிக்குஞ்சரம் பொன்னடி போற்றுவாம்*

— தல புராணம்.

## 1. தோற்றுவாய்.

*கடவுளை வழிபடுதற்குரிய இடங்கள் மூன்று. அவை யாவன: கோயில். சிவஞானிகள், இதயம். இவற்றுள் சிவஞானிகளுடைய திருமேனியைக் காண்பது மிக அரிது. அதை இப் பிறவியிலே ஒரு முறையேனுங்காண முடியாது போகவுங்கூடும். இதய வழிபாட்டிலே கண் முதலிய பொறிகளும், தலை முதலிய உறுப்புகளும் தொழிற்பட மாட்டா. இவைகள் சிவத்தொண்டிலே சென்றால் மட்டும் தீய வழியிலே செல்லாமல் நிற்கும். இல்லையேல் தம் விருப்*

பப்படி இயங்கும். நமக்குள்ள எந்தக்கருவியையுந் தீயவழி யிலிருந்து விலக்க அதை நேரே அடக்குவது மிக அரிது. அதற்கு நல்வழியைக்காட்டுவதே முறை. இக்கருத்துப் பற்றியே "பற்றுக பற்றற்றான் பற்றினைப் பற்றைப், பற்றுக பற்றுவிடற்கு" என்று திருவள்ளுவர் கூறினார். ஆகையால் மூவகை வழிபாடுகளுள்ளும் நமக்கு மிகப் பொருத்தமானது கோயில் வழிபாடே. மற்றவைகள் இதற்குத் துணையானவை. மூவகை வழிபாடும் வேண்டுவதே. கோயிலானது பாதகன் முதல் சிவஞானிகள் ஈறாக உள்ள யாவருக்கும் இன்றியமையாதது. சீவன் முத்தரானவற்கு கோயில் வழிபாடு மிக அவசியம் என்பது ஆகம முடிவு.

உயிர்கள் இம் மண்ணுலகத்திலே நால்வகை யோனி யிலும், எழுவகைப்பிறப்பிலும், எண்பத்து நான்கு லக்கம் யோனி பேதங்களிலும், அளவின்றி வினை வயத்தாற் பிறந் திறந்து உழலுவன. சிவபெருமான் அவ்வுயிர்களை அவற்றி னின்றும் எடுக்கு நிமித்தத்தால் உலகை உண்டுபண்ணுங் கால், தலம், தீர்த்தம், மூர்த்தியென்னும் மூன்று வடிவாய் விளங்கினார். இம்மூன்றினையுஞ் சிவபெருமானாகவே எண்ண வேண்டும். அவ்வாறு அவைகளை முறையாக வணங்குவோர் பரமஞானாசிரியரால் உண்மை விளங்கப்பெற்று முத்தியடை வார்கள்.

சிவன் கோவில் இல்லாத ஊர் எவ்விதச் செல்வங் களால் நிறைந்திருப்பினும் திருவமைந்த ஊரன்று. அது காடேயாம். "அவையெல்லாமூரல்ல அடவிகாடே" என வரும் திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரத்தால் அறிக. "விபூதி யில்லாத நெற்றிபாழ் சிவாலயம் இல்லாத ஊர்பாழ். சிவபெருமானைப் பூசியாத பிறவி பாழ். சிவபெருமானைப் பற்றிக் கூறாத நூல் பாழ்." எனவரும் பிருகச்சாபால உப நிடத வாக்கியமுங் காண்க. உமாபதி சிவாசாரியர் "கோவிலை மறந்தவர்கள் புலையரெ"ன்று பாடினார். சிவவடி வங்களாகிய தலங்களோ அளவில்லாதன. ஆயிரங்கோடி

யுண்டு. அவைகளுள்ளும் ஆயிரத்தெட்டுத்தலங்களே மேலானவை. அவைகளுள்ளும் நாயன்மார்களால் தேவாரப் பாடல் பெற்ற இருநூற்றெழுபத்து நான்கு தலங்கள் மிகச் சிறந்தவை. அவையாவன:—

"ஈண்டு புகழ்ச்சோழநாட்டிலொரு நூற்றுத்
தொண்ணூ றீழத்திரண்டு
பாண்டி யினீரேழ் மலைநாட்டொன்று
கொங்கேழ் மகதமிருபத்திரண்டு
பூண்ட தொண்டை நன்னாட்டெண்ணான்குதுளு
வொன்று வடபுலத்தைந்தாக
வாண்ட சிவதல மிருநூற்றெழுபத்து
நான்கு தொகையாகு மன்றே."

—சிவக்ஷேத்திர விளக்கம்.

○ இதில் பாண்டி நாட்டுத்தலங்கள் பதினான்கு.

☆ அதில் திருச்சுழியல் பத்தாவது தலம்.

இத்தல வரலாற்றை ஒரு சிறிது கூறுவாம்:

| | |
|---|---|
| சோழநாட்டுத் தலம் | 190 |
| ஈழநாடு | 2 |
| பாண்டி நாடு | 14 |
| மலை நாடு | 1 |
| கொங்கு நாடு | 7 |
| மகத நாடு | 22 |
| தொண்டை நாடு | 32 |
| துளுவ நாடு | 1 |
| வட நாடு | 5 |
| | 274 |

○ கூடல் புனவாயில் குற்றாலம் ஆப்பனூர்
ஏடக நெல்வேலி இராமேசம்—ஆடானை
தென்பரங்குன்றஞ் சுழியல் தென்கானப்பேர்புத்தூர்
வன்கொடுங் குன்றம் பூவணம்.

☆ "பாண்டி பதினான்கு தன்னில் பத்தாந்தலமுடையோர்"
என்றார் திருச்சுழியற்குரவைப் பாட்டில் (14)

## 2. தலமும், இருப்பிடமும்.

*சீர்மன்று செல்வக்குடிமல்கு சிறப்பினோங்கும்*
*கார்மன்று சென்னிக்கதிர் மாமணிமாடவைப்பு*
*நார்மன்று சிந்தைப்பலநற்றுறை மாந்தர்போற்றும்*
*பார்மன்று தொன்மைப்புகழ் பூண்டதுபாண்டிநாடு*

— திருத்தொண்டர் புராணம்

சிவபெருமானுக்குப் பாண்டி நாடே பழம் பதி. சிவ பெருமான் அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்தான். அவன் உறையும் நாடு "தென்பாண்டிநாடே தெளி" என்று மணிவாசகர் கூறுகிறார். பாண்டி நாடே "தமிழ் நாடு" எனத்தெய்வச்சேக்கிழார் அருளியுள்ளார். பரந்த உலகமாகிய நில மடந்தை என்னும் அழகிய நங்கைக்கு அவள் மார்பினிடத்தில் அணியப்பெற்ற ஒளி வீசும் பதக்கமே பாண்டியநாடு. அங்குள்ள நகரங்கள் பதக்கத்தில் ஒழுங்காகப்பதிக்கப்பெற்ற மணிகளாக விளங்கும் என்றும், பாண்டி நாடு என்னும், நங்கைக்கு கொப்பூழ் அங்கமே திருச்சுழியல் என்றும், பரஞ்சோதி முனிவர் பகர்கின்றார்.

எல்லா உலகங்களையும் ஈன்றருளிய தாயாகிய தடாதகைப் பிராட்டியாரும், ஞானவொளிப் பிழம்பாகிய சோமசுந்தரக் கடவுளும், அவர்கள் மதலையாகிய உக்கிரகுமார வழுதியும் என மூன்று தலைவர்களும் செங்கோல் செலுத்திய நாடு இந்தப்பாண்டி நாடல்லாமல் கடல் சூழ்ந்த நிலவுலகில் வேறு நாடுகள் இல்லை. எனவே பாண்டிய நாட்டின் பெருமை அளவிடற்கரியது. இத்தகைய பாண்டிய நாட்டில் ஒரு சமயம் மன்னனும் மக்களும் அமண சமயத்தைச் சார்ந்து இருந்தமை திருஞானசம்பந்தர் வரலாற்றால் அறிவோம். அவர் எழுந்தருளி மதுரை வந்து அமணர்களை வாதில் வென்று சிவபெருமான் முதற்கண் நிறுத்திய மெய்ச்சமயமாகிய சைவ சமயத்தை மீண்டும் நிலைபெறச் செய்தருளிச் சைவமுதற்குருவாய் விளங்கினார். இன்று சைவம் வாழுமாறு செய்த கருணை திருஞானசம்பந்தப் பெருமானையே சாரும். அவருக்குக் கவுணியர் என்றும், கவுணிய கோத்திரர்

என்றும் பெயர். இவரது கோத்திர மூல புருடராகிய கவுண்டின்யன் முனிவர் தன் குலத்திலே திருஞானசம்பந்தப் பெருமான் அவதரித்துத் தன் பெயரையுங் கொண்டு விளங்க எங்கே சென்று தவஞ்செய்து பேறுபெற்றார் என வினவின் அது திருச்சுழியலே யாம்:—

*மோன முனிவர் முத்திமாநகராந் திருச்சுழியல் முற்றியன்றே*
*மான கவுணியமுனிவன் பேறுபெற்றான் வாழ்வாமெங்கள்*
*ஞான முனிசம்பந்தன் சீகாழித்துறை வள்ளலையுந்தன் சீ*
*ரான குலத்தவதரிக்கத்தன் பேரைத்தவதரிக்கவருள் பெற்றானால்*

— தலபுராணம்.

திருச்சுழியற் பெருமை ஒருவரால் சொல்லி முடிக்குந் தன்மையுடையதல்ல. ஒருவாறு சுருக்கமாகவே கூற முடியும்.

திருச்சுழியல் பாண்டிய நாட்டில் * பரிதிகுடி நாடு என்ற பகுதியில் விளங்குவது. மருத நிலத்தைச் சார்ந்தது.

திருச்சுழியல் எல்லை :— வடக்கு — காலவதீர்த்தம்
கிழக்கு — கண்ணுவதீர்த்தம்
தெற்கு — கோபிதார்வனம் (ஆலடிபட்டி கிராமம்)
மேற்கு — பன்னகசைலம் (பாறைக்குளம் குன்று).

திருச்சுழியல் தற்காலம் இராமநாதபுரம் மாவட்டம் அருப்புக்கோட்டை வட்டத்தில் அருப்புக்கோட்டைக்குக் கிழக்கில் எட்டு மைல் தொலைவில் உள்ளது. விருதுநகர் இரயில் நிலையத்திற்கு கிழக்கே 20 மைல். மதுரைக்குத் தெற்கே 30 மைல். மதுரையிலிருந்தும் விருதுநகரிலிருந்தும்

---

* "கதிரவன் பரிதிநன்றென்று மிடங்கண்டு சிவலிங்கமுந் தாபித்தான்" —தல புராணம்.

வருடத்தில் இரு முறை சிவலிங்கத்தின் மீது சூரியனது ஒளி வீசுவதைக் காணலாம்.

அருப்புக்கோட்டை வழியாக மோட்டார் வண்டிகள் செல்கின்றன. தற்போது விருதுநகர் மானாமதுரை இரயில்பாதை இணைப்பில் இத்தலத்திற்கு இரயில் நிலையம் ஏற்பட்டு இருக்கிறது. 25—5—1964 தேதி முதல் இரயில் வண்டிகள் செல்கின்றன.

திருச்சுழியலில் ஏறத்தாழ 1000 வீடுகள் உள. அதில் ஏறத்தாழ 4000 மக்களும் உள்ளனர். ஊராட்சிமன்ற ஆட்சி உண்டியது. தந்தி, தபால், தொலைபேசி நிலையம், கார் நிலையம், துணைப்பதிவாளர் அலுவலகம், போலீஸ் நிலையம் முதலியவையுள்ளன. மருத்துவ மனை, கால்நடை மருத்துவ மனை, தொடக்கப்பள்ளிகள் இரண்டு, உயர்நிலைப்பள்ளி ஒன்று ஆகியவை யுள்ளன. ஒரு தாலூகாவின் தலைநகராக விளங்கிய திருச்சுழியலில் தற்போது கிளைத்தாலூகா அலுவலகமே உள்ளது.

## 3. தலப் பெயர்கள்.

1. வயலூர்
2. முத்திமாநகர்
3. முத்திபுரம்
4. முத்திநகர்
5. ஆவர்த்தபுரம்
6. சூலபுரம்
7. சூலநகர்
8. திரிசூலபுரம்
9. அரசவனம்
10. போதிவனம்
11. சுழிகை
12. சுழிகாபுரி
13. சுழியல்
14. திருச்சுழியல்

தற்போது "திருச்சுழி" என்று அழைக்கின்றனர். ஒரு சமயம் சிவபெருமான் பிரளயத்தைச் சுழித்துப் பூமிக்குள் புகச்செய்தனர். ஆதலின் திருச்சுழியல் எனப்பெயர் ஏற்பட்டது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தில் திருச்சுழியல் என்றே குறித்துள்ளார்.

## 4. தலப்பெருமை.

இத்தலத்தின் பழமையைக் கூறல் இயலாது.

"கலித்தவூழிகள் பலபல சதுர்யுகங்கண்டு
சீதரன்தொழுங்கயிலையிற் சிறப்பிது வென்றே
வேதநாயகனிருக்கின்றான் சுழியலின் மேவி"

என்று தல புராணம் கூறுகிறது. கிரேதாயுகத்தில் பூமி தேவி பூசித்தாள், திரேதாயுகத்தில் பிரளயஞ் சுழித்த லீலை நடந்தது. துவாபரயுகத்தில் கௌதமர் அகலிகை இருவரும் திருநடனமும், திருமணக்கோலமும் கண்டனர். கலியுகத்தில் கடைச்சங்கத் தமிழ்ப்புலவர்கள் வழிபட்டனர்.

மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்தவரும் பாண்டி நாட்டு அமைச்சராக இருந்தவருமான் மாணிக்கவாசக சுவாமிகள் இத்தலத்தை வழிபட்டுத் திருக்கோவையாரில் சிறப்பித்துள்ளார். ஏழாம் நூற்றாண்டில் திருஞானசம்பந்த நாயனார் மதுரை வந்து சைவ சமயத்தை நிலைபெறச் செய்த பின் தானும் தன் தந்தை சிவபாத இருதயர், நின்ற சீர் நெடுமாறர், மங்கையர்கரசியார், குலச்சிறையார் திருநீலகண்ட யாழ்ப்பாணர், பதினாயிரம் அடியார்கள் புடைசூழவந்து பாடி வழிபட்டுள்ளார். திருநாவுக்கரசு சுவாமிகள் திருஞான சம்பந்தர் வந்து சென்ற பின்பு வந்து வழிபட்டுக் காப்புத் திருத்தாண்டகத்தில் சிறப்பித்துள்ளார்.

ஒன்பதாம் நூற்றாண்டில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான் பெருமானுடன் வந்து வழிபட்டு "ஊனுயிர்" எனத்துவங்கும் தேவாரப் பதிகம் இசைத்துப் பள்ளிமடத்தில் தங்கி இருந்தார். ஒரு நாள் கானலில் சிவபெருமான் சுந்தரரின் கனவில் தோன்றிச் செங்கையிற் பொற் செண்டும், திருமுடியிற் சுழியமுடன் எங்குமிலாத் திருவேடம் என்புருகமுன் காட்டி "கானப்பேர் நாமிருப்பது" எனக் கூறி மறைந்தருளினார்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் விழித்து அதிசயித்து இறைவன் காளைப்பருவத்தினராய்க் காட்சி தந்ததை சேர

மானுக்கும் அறிவித்துத் "தொண்டரடித் தொழலும்" என்ற பதிகம் பாடிக்கானப்பேருக்குச் சென்றார். இவ் வதிசயம் நிகழ்ந்த இடம் பாவகரி நதி கீழ்க்கரையில் உள்ள பள்ளிமடம் கிராமமாகும். அந்த இடத்தில் காளையார் கோவில் ஏற்பட்டுள்ளது. சுந்தரர் திருநாட்டுத் தொகையிலும், திரு இடையாற்றுத் தொகையிலும் இத்தலத்தைப் போற்றியுள்ளார்.

பனிரெண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சேக்கிழார் பெருமான் சமயாசாரியர் மூவரும் வழிபட்ட வரலாற்றைப் பனிரெண்டாந் திருமுறையாகிய திருத்தொண்டர் புராணத்தில் (பெரிய புராணம்) பாடியுள்ளார்.

திருமலைநாயக்கர் காலத்தில் (கி. பி. 1623-59) வாழ்ந்த குமரகுருபர சுவாமிகள் இத்தலத்தை வழிபட்டுத் தாம்பாடிய மீனாட்சியம்மை குறத்தில் இத்தலத்தைக் குறிப்பிடுகிறார். அங்கயற்கண்ணியம்மை பிள்ளைத்தமிழ் இவரே பாடியிருக்கலாம் என்றும் கூறுவர்.

## தலபுராணத்தில் கூறப்படும் தலப்பெருமை.

இறைவன் தாம் உறைவதற்கிடமாகச் சதுர்யுகந்தோறும் முறையே நாவல், மா, மகிழ், அரசு விருட்சங்களாக கவ்வைக்கடலருகே விளங்கும். யுகந்தோறும் இவ் விருட்சத்தின் கீழ் விநாயகர் எழுந்தருளியிருப்பர். இதனால் "தாவர விநாயகர்" என்றும் பெயர் பெறுவர். எத்தலங்களில் செய்த பாவங்களாயிருப்பினும் திருச்சுழியலைக் கண்டபோது நீங்கும். திருச்சுழியலில் செய்த பாவங்கள் அங்கு தீர்வதன்றி வேறு எந்தத் தலம் சென்று இறைஞ்சினும் நீங்கா.

பன்னக சயிலமே கயிலை மலையாகும். கௌண்டின்ய நதி (பாவகரி)யே கங்கையாகும். சுழியற்பரமனே குருநாதன். அங்கு வாழ்கின்ற மனிதர்கள் யாவரும் உம்பர்.

அறிவினுல் தவம் புரிவது அவரவர் செய்வது. ஆனுல் திருச்சுழியலில் மனிதர்கள் மட்டுமல்லாமல், பறவை, மிருகம், கிருமி, கீடம் முதலிய யாவும் இறுதியிற் சிவபதம் பெறும். திருச்சுழியலைக் கருத்துற நினைக்க, பேச, காணச்சிவபதந் தருமென வேதங்கள் முழங்கும். கயிலையெம் புனிதன் இவ் வுலகத்திலுள்ள எல்லாத் தலங்களிலும் கலந்தருள் செய்வானுயினும், கொடிபோன்ற மெல்லிய இடையை யுடைய துணைமாலைத் தேவியுடன் இடைவிடாதமர்ந்து அருள் செய்வது அடியாருடைய இதயமும் திருச்சுழியலுமே யாகும் என வேதங்கள் முழங்கும்.

அறிந்து செய்த பாவம், அறியாது செய்த பாவம், மறந்து செய்த பாவம், மறவாது செய்த வஞ்சம் யாவும், திருச்சுழியலைச் சேர்ந்தால், புயற்காற்றிலகப்பட்ட பஞ்சு போல் பறந்துபோம்.

திருச்சுழியலில் வந்து ஒரு வேளை தங்கிச்சென்ரேர் சாலோக பதவி பெறுவர். திருச்சுழியலிலேயே பிறந்து மரித்தோர் முத்தராவார். அவர் மீண்டு உலகினில் வாரார்.

ஏனைய தலங்களில் செய்யும் வேள்வி விரதங்கள் முதலியவையின் பயனைவிட ஆயிரமடங்கு பயன் திருச்சுழி யலில் செய்வோர் பெறுவர்.

காசி, திருக்காளத்தி, திருக்கழுக்குன்றம், சிதம்பரம், கும்பகோணம், திருவாரூர் முதலிய தலங்களில் ஆயிரம் அசுவமேத யாகம் செய்த பலன் எல்லாம் திருச்சுழியலில் சிவனடியார்க்கு வழங்கும் ஒரு பிடி சோறு வழங்கும்.

யாவராயினும் திருச்சுழியலில் எவ்வள வேனும் சிவ திருப்பணி செய்வோம் என நினைத்தாலும் அவர் இருப்பது கயிலையே. அத்திருப்பணியை ஐயமேற்றேனும் உவகையாற் செய்து முடிப்பவர் பெறும் பயன் சொல்ல இயலாது.

திருச்சுழியற் பரஞ்சுடரைக் காலையிற் றொழப்புரவி வேள்விப் பயன் காட்டும். உச்சியில் தொழ இராசசூயப் பயன் எய்தும். மாலையில் தொழச் சிவன் முத்தியே.

திருச்சுழியற் பெருமானைப் பால், நெய், இளநீர், புனல் முதலிய பொருள்களால் விதிப்படி அபிடேகமியற்றி னோர் தாம் விரும்பும் வண்ணம் செல்வந்துய்த்து இறுதியில் கயிலை சென்று வாழ்வர்.

திருக்கோகரணம் முதலிய அரிய பல இலிங்கத்தின் முடிமேல் ஆயிர வில்வத்தளம் அருச்சித்த பலன் எல்லாம் திருமாலும் நான் முகனுந்தேடிக்காணாத சுழியல் நாயகன் முடிமேல் சிவராத்திரியன்று நடு நிசியில் அருச்சிக்கும் ஒரு வில்வத்தளம் வழங்கும்.

வடக்குக்காலவ தீர்த்தம். தெற்கு கோபிதார்வனம் மேற்குப் பன்னக சயிலம் கிழக்குக் கண்ணுவ தீர்த்தம் இதற்குட்பட்ட இடம் காசிதன்னிலும் ஏற்றமாக நவில்வர். கவுண்டின்ய நதியின் மணல் எல்லாம் லிங்கமாகக் கவினுற விளங்கும்.

## 5. தீர்த்தங்களும், மேன்மைகளும்.

### 1. பாவகரி நதி.

இது ஊருக்கு வடக்கே கிழக்கு நோக்கி வந்து பின் தென்வடலாக தெற்கே செல்கிறது. கௌண்டின்ய நதி என்றும் தற்காலம் "குண்டாறு" எனவும் வழங்கும் கவுண்டின்ய முனிவர் தவத்திற்கிரங்கி' இறைவன் அழைத்த நதி. "மகிழ்தர விவ்வாறழைத்தனம். உனது பொருட்டினின் வந்த காரணத்தாற் பகர்தரு கவுண்டின்ய நதி யென்று நாமம். இப்புனல் படிவோர்க்குச் சகல பாவமும் போமாத லாற் பாவகரியெனும் பெயர் தரித்தனமால்" சுழியற் புராணம் பாவகரிச் சருக்கம் 33.

பாவகரி நதியை நினைக்குமுன் மனப்பிணி போகும். அதைக்கண்ட மாத்திரத்தாற் கிரகதோடப்பகை மாறும். பாவகரிப்புனல் உட்கொள்ள கொடும்பிணி அடங்கது மகலும். பாவகரியில் மூழ்கின் பெண்வதை அந்தணர் வதை, கோவதை ஒழியும் "நதிகளிற் கங்கா நதியை மேலாகப் புவியுள்ளோர் நவில்வது வழக்கே. கதிதரும் பாவகரி நதிப்பெருமை யாவரே கணித்திடவல்லார், புதிய மென்பஞ்சுக் குவடெனக் குவித்த குவியலிற் புகு கனலது போல அதிக வெம்பாவம் யாவையும் நொடிக்குளரிக்கு மிந் நதி படிந்தாடில்" — தலபுராணம்.

## 2. கௌவைக் கடல்.

இது சந்நிதிக்கெதிரில் படிக்கட்டுகள், மையமண்டபத்துடன் விளங்கும் குளம். "ஒலிப்புணரி" என்றும் பெயர். "கௌவைக்கடல் கதறிக் கொணர் முத்தம்" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தில் சிறப்பிக்கப் பெற்றது. சிவபெருமான் பிரளயத்தைச் சுழித்து இத்தீர்த்தத்தின் பிலத்துள் புகச்செய்தனர்என்பது புராணவரலாறு. இதில் மூழ்க எண்ணுவார், படிவார், மூழ்கி எதிர்வருபவரைக் காண்பார் செய்த வினை அன்றே தீரும். விண்ணவராவார்.

## 3. பூமி தீர்த்தம்.

இது பூமிதேவியால் உண்டாக்கப்பட்டது. சந்நிதிக்கெதிரில் ஆற்றுக்குச் செல்லும் பாதையில் உள்ளது. பூமி தீர்த்தத்தில் நீராடிப் பூமிநாதனை இறைஞ்சினோர்கள் இகத்தில் செல்வம் பெற்றுவாழ்வர். பின் கூற்றை வென்று சிவ பதத்திருப்பர்.

## 4. சூல தீர்த்தம்

"சிவகங்கை" யென்றும் பெயர். இது கௌவைக்கடல் மைய மண்டபத்திற்குப் பின் ஈசான மூலையில் உள்ளது.

உமையவட்காக இறைவன் சூலத்தால் கல்லி பாதாள கங்கையை தருவித்தது. இதில் மூழ்கி தரும தாவரத்தை வலம் வந்தபின் வரதனைப்பணிவோர் பிறப்புத் துன்பம் நீங்குவர். மீண்டும் இவ்வுலகுக்கு வாரார். கங்காதேவி வியேதன் பாபமனைத்தையும் போக்கும் பொருட்டு ஆண்டு தோறும் மாசிமாத நிறைமதியன்று நடுப்பகலில் இதில் மூழ்கி திருமேனிப்பெருமானை வழிபடுகிறாள் என்று வடமொழித் திரிசூலபுர மான்மியம் கூறும்.

## 5. பிரம தீர்த்தம்.

இது கோயிலுக்குள் வடக்கு வாசல் அருகேஉள்ளது. பிரமதேவன் வந்து பூசித்து உண்டாக்கப்பட்டது. இதுவே பிரயாகை என இறைவன் கூறியது. இதிற்படிவோர் செல்வந்துய்த்து நமன் வசம் அகப்படாமல் சத்தியலோகஞ் செல்வர்.

## 6. திரிநயன தீர்த்தம்.

இது திருச்சுழியலுக்கு வடகிழக்கு அஞ்சாணைக் குத்திக் கிராமம் கண்மாய் உள்வாயில் சோமசேகரலிங்கந் தாபித்த சந்திரசேன பாண்டியனால் உண்டாக்கப்பட்டது. இதில் மூழ்கி சோமசுந்தரனைப் பணிவோர் சித்தத்தில் நினைத்த யாவும் எளிதிற் கிடைக்கப்பெறுவர். புத்திரர் முதலாய செல்வம் பெறுவர்.

## 7. ஞானவாவி.

இது மேலரதவீதியில் திருமதிலை யொட்டியுள்ளது. ஐந்து மூலைக்கிணறு என்று கூறுவர். கௌதம முனிவரால் காணப்பெற்றது. இதில் மூழ்குவோர் பிணிதீரும். பழவினை யொழியும். எது விரும்பினும் வந்து வாய்க்கும். பிறவித் துன்பம் என்பதே இல்லை.

## 8. காலவ தீர்த்தம்.

திருச்சுழியலுக்கு வடக்கே ஆமைக்குளம் கிராமத்தின் வட்புரம் காலவ முனிவர் பூசித்த காலவ லிங்கத்தின் அருகேயுள்ள ஓடையாகும். இதிற் படிந்து பிஞ்ஞகனைப் போற்றி இதன் கரை தனில் பண்டைப்பிதிர் கடன் ஆற்று வார், சரயு, கங்கை, பிரயாகையில் செய்த பலன் அடைவர்.

## 9. கண்ணுவ தீர்த்தம்.

திருச்சுழியலுக்குக் கிழக்கே சப்பாணி ஏந்தல் கிராமத்திற்குத் தெற்கே கண்மாயில் கண்ணுவ முனிவர் பூசித்த கண்ணுவ லிங்கத்திற்கருகே யுள்ளது. இதில் மூழ்கு வோர் விண்ணவராவார்.

## 10. கோடி தீர்த்தம்.

இது அர்ச்சுனன் தீர்த்த யாத்திரையாக புறப்பட்டு பாண்டிய நாட்டுக்கு வந்து, பாண்டியன் மகள் சித்திராங் கதையை மணந்து, அவளுடன் திருச்சுழியல் வந்து, திருமேனிப்பெருமானை இறைஞ்சி, தன் காண்டீபத்தின் கோடியால் கல்லி, உண்டாக்கப்பட்டது. அதனால் கோடி தீர்த்தம் என வழங்கும். இது கோயிலில் அம்மன் சந்நிதி முன்புள்ள கிணறு. இதில் மூழ்குவோர் பாபமெல்லாம் நீங்கி எல்லா மங்கலங்களையும் பெறுவர். தேவஸ்தானத்தார் மேல் தளத்தில் நீர்த் தேக்கம் கட்டி வடக்குத் திருமதிலை யொட்டி குழாய்கள் வைத்துக் கொடுத்துள்ளனர். ஊர் முழு வதுக்கும் இதன் மூலம் தண்ணீர் கிடைக்கிறது. இந்த தீர்த்தம் எப்பொழுதும் வற்றாத பெருமை யுடையது.

[பாவகரி, கவ்வைக்கடல் தவிர மற்றவைகள் அட்ட தீர்த்தங்கள் எனப்படும்.]

## 6. கோயில் அமைப்பும் வழிபடு முறையும்.

கோவில், நகரின் தென் பகுதியில் தெற்குத்தேர் தெருவை அடுத்து அமைந்துள்ளது. திருச்சுழியலுக்குச் சென்றவுடன் முதலில் நாம் காண்பது கீழைத்தேர் தெருவில் தேர் நிலையும், யானை கட்டப்பட்டுள்ள மகாலும், செழித்து வளர்ந்தோங்கியுள்ள தலவிருட்சமாகிய திருவரசும் விநாயகர் கோயிலுமாகும். கோயிலின் கீழ் வாயலில் நுழைந்தவுடன் வலதுபுறம் சுவாமி சந்நிதிக்கெதிரில் மைய மண்டபத்தோடும் படிக்கட்டுகளுடன் உள்ள "கௌவைக் கடல்" தெப்பக்குளத்தைக் காணலாம். அதற்கடுத்துள்ளது ஆத்தான மண்டபமாகும், இம் மண்டபத்தில் இறைபணியாளர் அலுவலகம் உள்ளது

அடுத்து முதலாவது குடவரை வாயலில் நுழைந்தவுடன் காண்பதும் கபத்தடி மண்டபமாகும். இம்மண்டபத்தில் பலிபீடம், கொடிமரம், இடபதேவர் உள்ளனர் விநாயகரும், வள்ளி தேவயானை இருமருங்குடைய சுப்பிரமணியர் சந்நிதிகள் உள. பலிபீடத்துக்கு இப்பால் எட்டுறுப்பும் தோய வணங்கி விநாயகரையும் சுப்பிரமணியரையும் வழிபட்டு உள்ளே செல்ல வேண்டும்,

அடுத்துள்ள குடவரை வாசலின் மேலே தான் ஏழு நிலைக்கோபுரம் உள்ளது. இவ்வாயலில் அதிகார நந்தியுள்ளார். அவரிடம் உள்ளே சென்று வணங்க அனுமதி வழங்குமாறு வேண்டிக்கொண்டு உள்ளே சென்றால் ஆறுகாற்பீடத்தைக் காணலாம். இங்கே சுந்தரமூர்த்திகள் தேவாரத்தைக் கற்களில் பொறித்து வைத்திருப்பதைக் காணலாம். அதற்கடுத்து நுழைந்தவுடன் சபா மண்டபம், அந்தராள மண்டபம், அர்த்த மண்டபம், அடுத்து மூலத்தானம் உள்ளது. மூலத்தானத்தில் திருமேனிப்பெருமான் சுயம்புலிங்கமாக காட்சி தருகிறார். அவரை அந்தராளமண்டபத்திலிருந்து வழிபட்டுச் சபா மண்டபத்தில் நடராசரையும்

மற்றும் அங்குள்ள உற்சவ மூர்த்திகளை (சந்திரசேகரர் பிட்சாடனர், சமயாசாரியர்) வழிபட்டு ஆறுகாற் பீடம் வழி வலம் வரவேண்டும். முதற்பிரகாரம், உட்பிரகாரம் என்றும் நாயக மண்டப பிரகாரம் என்றும் வழங்கப்படும். இப் பிரகாரத்தில் கிழக்கே உள்ள உஷா பிரத்யுஷாதேவி இருபுற முடைய சூரியனையும், தெற்கேயுள்ள அறுபத்து மூவர் சேக்கிழார், சந்தானசாரியர், சப்த மாதர்கள் இவர்கள் திருவுருவங்களையும் வழிபடவேண்டும்.

நடராசர் சந்நிதிக்கெதிரில் அறுபத்து மூவருக்கிடை யில் கௌதமர் அகலிகை உருவங்கள் உள. இவர்கள் திரு நடங்கண்டமையால் சுழிகையம்பலம் எனப்பெயர் வழங்கும்.

முதற்பிரகாரத்தின் தென்மேற்கு மூலையில் உற்சவ நாயகர் (சோமாஸ்கந்தர்) எழுந்தருளியுள்ளார். அதற்கடுத்து விக்கினேச்சுரர், காசி விசுவநாதர், பூமி நீளாதேவி இருபுற முடைய சுழிகைக்கோவிந்தரும் (திருமால்) உள்ளனர். இவர் களை வழிபட்டு வடமேற்கு மூலையில் வள்ளி தேவயானை இரு மருங்குமுள்ள சுப்பிரமணியக்கடவுளை நின்ற கோலத்தில் காணலாம். அவரை வழிபட்டு சண்டேச நாயனரது தனிக் கோவிலில் சிவபெருமானை வழிபட்ட பயனைத்தந்தருளுமாறு வேண்டிக்கொண்டு வருவோமானுல் வடக்கில் பாத்திரம் வைத்துள்ள அறையையும் திருவாபரணம் வைத்துள்ள கரு வூலத்தையும் காணலாம். அடுத்து உற்சவ நடராசர் எழுந் தருளியுள்ள மண்டபமும், யாகசாலை மண்டபமும் அடுத்து கால பைரவரையும் கிருத்திகை உரோகிணி இருபுடையுடை சந்திரனையும் வழிபடவேண்டும்.

கருவறையைச் சுற்றித் தெற்கே தென்முகக் கடவுளும் மேற்கே இலிங்கோற்பவரும் (அண்ணமலையார்) வடக்கே துர்க்காதேவியும் உள்ளனர்.

பின் எழுநிலைக்கோபுரமுள்ள வாயல் வழி வந்து தெற்கே தேவியார் சந்நிதிக்குச் செல்லவேண்டும். இதற் கிடையில் உற்சவ நாயகர் உற்சவ காலங்களில் எழுந்தரு

ளும் கருங்கற்சுவுக்கை மண்டபமும் அடுத்து நடுப்பிரகாரமும் உள்ளது. இங்கே தென் கிழக்கு மூலையில் மடைப்பள்ளியும் அடுத்து படித்தரச் சாமான்களுள்ள அறையும் உள்ளன. அம்மையின் கோவிலில் நுழைந்ததும் பலிபீடம், கொடிமரம் இடபதேவரும் அடுத்து ஆறுகாற் பீடத்தையுங் காணலாம். அதற்கடுத்துள்ளது பள்ளியறை மண்டபம். அடுத்து அர்த்த மண்டபமும் அம்மை மூலத்தானமும் உள. மூலதானத்தில் துணைமாலை நாயகியை வழிபட்டு வலம் சென்று அனுக்கை விநாயகர் மேற்கே விநாயகர் சுப்பிரமணியரை வழிபட்டு வடக்கு பிரகாரம் சண்டேசரது சத்தியாகிய யமதீயம்மைத் தனிக்கோவிலில் அம்மையை வழிபட்ட பயனைத்தருமாறு வேண்டிக்கொள்ள வேண்டும். கருவறையைச் சுற்றி முறையே தெற்கே இச்சாசத்தி மேற்கே ஞான சத்தி வடக்கே கிரியா சத்தியுள்ளனர். பின்பு திருவாச்சி மண்டபம் வந்து தெற்கு நோக்கி தெற்கு ஆடி வீதியில் வலம்வரத் தொடங்க வேண்டும். ஆடிவீதியின் தென்மேற்கு மூலையில் அண்டம்பிரண்ட விநாயகரையும் மேலே ஆடிவீதியில் தல விருட்சமாகிய புன்னை விருட்சத்தையும் வடமேற்கு மூலையில் வள்ளி தேவயானை இருபுறமுடைய கிருத்திகா சுப்பிரமணியரையும் வழிபடவேண்டும். வடக்கு ஆடிவீதியில் பிரளயவிடங்கர் தனிக்கோவிலும் பிரம தீர்த்தமும் உள. இங்கேவழிபட்டு கிழக்கே வருவோமானால் மேற்கு நோக்கிய தண்டபாணிசுவாமி கோவிலைக் காணலாம். அங்கே சென்று தண்டபாணியை வழிபட்டு தெற்கே வந்தால் நவக்கிரகத்தைக் காணலாம். நவக்கிரகத்தை வழிபட்டுப் பின்னர் சுவாமி சந்நிதிநேர் நின்று மீண்டும் திருமேனிநாதரை வணங்கி ஆத்தான மண்டபத்தில் அமர்ந்து ஐந்தெழுத்தை இயன்றவரை எண்ணி அப்பால் எழுந்து போதல் வேண்டும் வடக்கு வாசலுக்கருகே பழைய திருக்கல்யாண மண்டபத்தில் திருப்புகழ்ச் சபை உள்ளது. அங்கு திருமுருகனை வழிபட வேண்டும்.

## 7. மூர்த்தியின் பெயர்கள்.

**1. தலவிநாயக மூர்த்திகள் :-**

1. தாவர விநாயகர்
2. தருமதாவரப் பிள்ளையார்
3. போதி விநாயகர்
4. போதிக் குஞ்சரம்
5. அரசமர்ந்த அத்தி
6. போதிக்களிறு
7. திருவரசு விநாயகர்
8. வேலடி விநாயகர்

**2. சுவாமியின் திருநாமங்கள் :—**

1. பூமிநாதர்
2. பூமீசர்
3. புவனேசர்
4. மணக்கோலநாதர்
5. கல்யாணசுந்தரர்
6. தனுநாதர்
7. பிரளயவிடங்கர்
8. நீத்தவிடங்கர்
9. சுழிகேசர்
10. திருமேனிநாதர்
11. திருமேனிப்பெருமான்

"செற்றார் திருமேனிப்பெருமானூர்"-திருச்சுழியல் தேவாரம்

**3. தேவியார் திருநாமங்கள் :-**

1. முத்துமாலையுமையாள்
2. மாணிக்கமாலை
3. சொர்ணமாலை
4. மாணிக்கவல்லி
5. சகாயவல்லி
6. துணைமாலையம்மை

## 8. புராண வரலாறு.

இத்தலத்தின் வரலாறு பதினெண் புராணத்தில் மகா கந்தபுராணத்தின் சேத்திர காண்டத்தில் உள்ளது. மொழிபெயர்த்துத்தமிழில் ஆக்கியவர் ஆராவமுதாசாரியார். இவரது வரலாறு கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

---

### திருச்சுழியற் புராண ஆசிரியர் வரலாறு.

திருச்சுழியற் புராண ஆசிரியர் பெயர் ஆராவமுதா சாரியர் என்பது. இவர் ஆக்கியோன் பெயரைப் புராணத் துட் குறிக்க வில்லை. 1895ம் ஆண்டு பதிப்பிற்கு புராணத் தின் பல பிரதிகளை ஆய்ந்து தவிய தாமோதரபுரம்.

திருச்சுழியற் புராணம் முதற் சருக்த்தில் கடவுள் வாழ்த்து, பாயிரம், நைமிசவனச்சிறப்பு, சூதர் புராண முறைத்த வரலாறு ஆகியவையுள்ளன. தலவிசேடச் சருக்கத்தில் தலப்பெருமைகள் தொகுத்து கூறப்பட்டுள்ளது. (தலப்பெருமைத் தலைப்பில் காண்க). பூமிதேவி பூசைச் சருக்கத்தில், பூமிதேவியானவள் இரணியன், இரணியக் கண்ணன் என்னும் அரக்கர்களால் தீண்டப்பெற்ற பாவம் நீங்கத் திருச்சுழியலில் வந்து தன் பெயரால் ஒரு தீர்த்த முண்டாக்கி வழிபட்டுப் பாவம் நீங்கிய வரலாறு கூறப்படுகிறது. நான்காவது சருக்கத்தில் பராக்கிரம பாண்டியன் சாரன் என்கிற பிராமணனைக் கொலைசெய்த பாவத்தை இங்கே வந்து நீங்கப்பெற்றான் என்று, கூறப்பட்டுள்ளது. ஐந்தாவது சருக்கம் பராக்கிரமவழுதி முத்திமா நகரம் உண்டாக்கிச்சிவன் முத்திபெற்றதைக் கூறும். ஆறாவது சருக்கம் இந்திரத்தும்நன் என்னும் பாண்டியனுக்காக, பிரளயம் வந்தபோது இத்தலத்தைத் திரிசூலத்தினால் தூக்கி நீர்நிலை மேல் நிலைநிறுத்தியதும் திரிசூலபுரம் எனப்பெயர் பெற்ற வரலாறும் கூறுகிறது.

ஏழாவது சருக்கம் சந்திரசேனபாண்டியன் காலத்தில் பிரளயம் வந்தபோது சிவபெருமான் சூலத்தின் முனையை நாட்டிப் பூமிக்குள் ஒருபிலம் உண்டாக்கிப் பிரளயத்தைச் சுழித்துப் புகச்செய்தனர் என்பதும், திருச்சுழியல் என்ற பெயர் அதனால் ஏற்பட்டது என்பதும் கூறும்.

---

வித்வான் திரு. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் பாடிய சிறப்புப்பாயிரத்தில் ஆராவமுதன் என்ற பெயர் காணப்படுகிறது:—

> அன்புருவானாற் கலைதோரா ராவமுதனுல
> கின்புறவே தென்சுழிய லீசனிசை—மன்பவநோய்
> போக்கு மருந்தாப்புகன்ற தற்குக் கைமாறிங்
> காக்கு நர்யாரென்பே னறிந்து.

எட்டாவது சருக்கம் கவுண்டின்ய முனிவர் தபசு செய்ததும், சிவபெருமான் அவர் பொருட்டுப் பாவகரிநதி அழைத்த வரலாறும், அந்நதிப்பெருமையும் கூறும்.

ஒன்பதாவது சருக்கம் கௌதமர் அகலிகையைச் சபித்த வரலாறும், பின் திருச்சுழியலில் திருநடனங்கண்டதும் அகலிகை சாப நீங்கிய பின் இருவரும் இங்கு வந்து திருமணக்கோலங் கண்ட வரலாறும் கூறும். [இஞ்ஞான்றும் பங்குனி மாதம் திருக்கல்யாணத்தன்று கவுதமர் அகலிகை திருவுருவங்களை எதிரே எழச்செய்து திருமணம் நடைபெறுவதைக் காணலாம்.]

பத்தாவது சருக்கம் சேரநாட்டரசன் மகள் மாலினி என்பவளை வேதாளம் பிடித்துக்கொள்ள, கோபில முனிவரது சொற்படி திருச்சுழியல் வந்து சூல தீர்த்தத்தில் மூழ்கி வேதாளம் பிடித்தது நீங்கப் பெற்றதும், வேதாளம் நல் லுருப் பெற்றுச்சென்றதும் ஆகிய வரலாறு கூறும்.

பதினோராவது சருக்கத்தில் பன்னகசைலம் ஏற்பட்ட வரலாறு கூறப்பட்டிருக்கிறது. [பன்னகசைலம் - பாரைக்குளம் கிராமத்திற்கு தெற்கே யுள்ள குன்று - திருச்சுழியலுக்கு மேற்கே ஒரு மைல். இங்கே குகைக் கோவில் உள்ளது சுற்றுக்கோயில் எனுந் தலைப்பில் காண்க.]

பன்னிரண்டாவது சருக்கத்தில் சித்ராத்துவசன் என்னும் கின்னரர் தலைவன் மூற்கல விருடியின் மகள்

---

ஆராவமுதன் என்பது சிவபெருமானது திருப்பெயர்களுள் ஒன்று. 'ஆராவமுதே அளவிலாப் பெம்மானே' 'ஆராவமுதின் அருட்டாளிணைபாடி' எனவருந் திருவாசகமுங் காண்க. இவர் திருச்சுழியலில் கீழைத்தேர்த் தெருவில் வாழ்ந்தவர் என்பதும் சிற்ப 'வல்லுநர் (விஸ்வகர்மர்) வகுப்பைச் சேர்ந்தவர் என்பதும் செவிவழிச்செய்தியாகும். சிற்ப நூல் நுட்பத்தை முத்திமா நகரச்சருக்கம் 30வது செய்யுளில் காணலாம். இவர் வடமொழி தமிழ் மொழியில் மிக்கபுலமை

சுப்பிரபைப்பூவையைத் தேர் மீது ஈர்த்துச்செல்ல, முற்கலரின் சாபத்தால் சித்திரத்துவசன் அரக்க உருவம் பெற்றுப்பின்னர் அலைந்து திரிந்து திருச்சுழியலில் வந்து திருமேனிநாதரை வழிபட்டு நல்லுருப்பெற்றுச் சென்றான். என்ற வரலாறு கூறப்பட்டிருக்கிறது

பதிமூன்றாம் சருக்கத்தில், நிசாகரன் என்னும் தவத்தோன் சிவபெருமானுக்காக குளநெல்லினின்றும் அரிசியைச்சேர்த்துச் சமைத்து நிவேதனமாக்கி வைத்துத் தியானத்தில் இருந்த பொழுது, சித்திரரூபன் என்னும் விஞ்சையன் கிளியுருவெடுத்து மேற்படி நிவேதனத்தை காலாற்கிளரியும் மூக்கினால் கட்டழித்தும் சிறகினாற் மண்ணை தூவியும் கெடுத்தனன். நிசாகரன் தியானம் நீங்கியபின் சித்திரரூபனைக் காட்டில் கிளியாகவே திரியும்படி சபித்து விட்டான். பன்னாள் கிளியுருவிலிருந்த சித்திரரூபன் திருச்சுழியல் வந்து வழிபட்டுப் பேறு பெற்றான் என்ற வரலாறு கூறப்பட்டிருக்கிறது.

---

யுடையவர். இவர்பெரும்பற்றப்புலியூர் திருவாலவாயுடையார் திருவிளையாடல் இயற்றிய செல்லூர் நம்பிகள் மாணவர் என்பது இவர் இயற்றிய புராணத்தில் அவரைத் துதித்திருக்கின்ற பாடலால் தெரியவருகிறது. மேலும் செய்யுள் அமைப்புகளை நோக்குங்கால் நம்பிகள் திருவிளையாடற் செய்யுட்களைப் பின்பற்றியே பாடியுள்ளார் என்பதும் புலனாகிறது. இவர் தலைசிறந்த சிவபத்தியுடையவர் என்பதும் ஆங்காங்கு வரும் சிவபரத்துவச் செய்யுட்களால் விளங்குகிறது. சென்னை இராவ்பகதூர் தணிகைமணி திரு **வ. சு. செங்கல்வராய பிள்ளை** எம். ஏ. அவர்கள் இப்புராணத்தைப்பற்றி "அருமையானவாக்கு செந்தமிழ்ச் சுவையும் பத்திச்சுவையும் ததும்பும் நூல்" என மதிப்புரை வழங்கியுள்ளதால் இந்நூலின் பெருமையை உணரலாம். நம்பிகள் காலம் கி. பி. 1227க்கு முன்பு ஒரு காலத்தவர்என டாக்டர் உ. வே. சாமிநாதஐயரவர்கள் திருவிளையாடல் முன்னுரையில் குறிப்பித்திருப்பதால் இவரது காலமும், அவரது காலமே எனக்கொள்ள

பதினான்காம் சருக்கத்தில் திருச்சுழியலைச் சுற்றி ஏற்பட்டுள்ள அட்டலிங்கங்களைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. [சுற்றுக்கோயில்கள் என்ற தலைப்பில் காண்க.]

பதினைந்தாம் சருக்கத்தில் அட்டதீர்த்தங்கள் பற்றிக் கூறப்பட்டுள்ளது. [தீர்த்தங்களும் மேன்மைகளும் என்ற தலைப்பில் காண்க.]

பதினாறும் சருக்கத்தில் சுந்தரமூர்த்தி சுவாமிகட்கு இறைவன் காளையாராகிக் காட்சி தந்த வரலாறு கூறப் பட்டுள்ளது.

---

லாம். மகா கந்தபுராணத்தின் க்ஷேத்திர காண்டத்தில் (வடமொழி) உள்ள திருச்சுழியற் புராணத்தை மொழி பெயர்த்து 15 சருக்கங்களாக பாயிரம் உள்பட 600 திரு விருத்தங்களில் பாடியதாக பாயிரத்தில் (23) கூறுகிறார். ஆனால் இவர் திருச்சுழியலில் சுந்தரமூர்த்தி சுவாமிகட்கு இறைவன் காளைப் பருவத்தினராய்க் காட்சி தந்த வரலாற்றைப் பாடவில்லை. பின்னர் யாழ்ப்பாணம் அம்பல வாண நாவலரவர்கள் பெரிய புராணத்தைப் பின் பற்றி 'காளையார் காட்சிச்சருக்கம்' என ஒரு சருக்கம்பாடி 149 செய்யுட்களைச் சேர்த்து வெளியிட்டுள்ளார்.

முதற் பதிப்பும், இரண்டாம் பதிப்பும் திருப்பணிச் செல்வர் தி. அ. சு. அண்ணாமலைச் செட்டியார் அவர்களால் பதிப்பிக்கப்பட்டன. அம்பலவாண நாவலர் யாது காரணத்தாலோ முதற் பதிப்பிலுள்ள செய்யுட்கள் சில வற்றை நீக்கியும் வேறுபல செய்யுட்களை மாற்றியும் அச்சிட்டுவிட்டார். இரண்டாம் பதிப்பு வெளியிட்டது சுமார் 1920ம் ஆண்டாகும். இந்நூலை மீண்டும் அச்சிடுங் கால் தக்காரைக்கொண்டு இரு பதிப்புக்களையும் ஒப்பு நோக்கி வழுக்களைந்து வெளியிடவேண்டும் என்பது என் விருப்பமாகும்.

## 9. தல விருட்சம்.

1. புன்னை, புன்னாகம், நாகம். புன்னை விருட்சம் மேற்கு ஆடி வீதியில் உள்ளது.

"வன்குழியினஞ்சுண்டபிரானிருந்தான் புன்னையக நீழல்"
—தலபுராணம்.

2. அரசமரம், போதி, தருமதாவரம், அச்சுவத்தம், திருவரசு என வழங்கப்படும். "திருவரசுகண்டாரே நீ நரகுக் கண்டாரே" என்ற தலபுராணச்செய்யுளும் காண்க. தருமமானது இங்கே தாவர வடிவாக யுகந்தோறும் முறையே நாவல், மா, மகிழ், அரசு விருட்சமாகக் கௌவைக்கடலருகே விளங்கும். கலியுகத்திலே அரசு வடிவாக விளங்குகிறது. தாவர விநாயகன் என்னும் பெயரோடு யுகந்தோறும் தும்பி மாமுகனும் அமர்ந்துள்ளார். இப்போதுள்ள திருவரசு மரம் மிகப்பழமையானது. "வான் கண்டபோதி கண்டு" என்ற தலபுராணச் செய்யுளையும் நோக்குக.

## 10. வழிபட்டோர்.

1. துணை மாலையம்மை.

2. தேவர்கள்.

1. திருமால்
2. பிரமன்
3. இந்திரன்
4. மன்மதன்
5. சூரியன்
6. சித்திரத்துவசன் (கின்னரர்தலைவன்)
7. சித்திரரூபன் (விஞ்சையன்)
8. நந்தீசுவரர்
9. பூமிதேவி
10. எண்ணில்லாத இமையோர்

"பெருவிமானத்து இமையோர் வணங்கு பெருந்திருச்சுழியல்"
—பெரியபுராணம்.

### 3. முநிவர்.

1. கவுண்டின்ய முநிவர்
2. காலவ முநிவர்
3. கண்ணுவ முநிவர்
4. கோபில முநிவர்
5. கௌதமர்
6. அகலிகை (கௌதமரின் மனைவி)
7. சதாநந்தர் (கௌதமரின் மகன்)
8. சூதர்
9 வாமதேவர்
10. சௌனகர்
11. நைமிசாரண்ய முநிவர்கள் பலர்

"தெய்வத்தவர் தொழுதேத்திய குழகன்"—தேவாரம்
(தவர்—முநிவர்)

### 4. அசுரர்.

1. கிருதாந்தகன்

### 5. அரசர்.

1. அருச்சுனன்
2. சித்திராங்கதை (அருச்சுனன் மனைவி)
3. ஏமரதன் (சேரன்)
4. சேரமான்பெருமாள் (சேரன்)
5. மாலினி (ஏமரதன் மகள்)
6. சோமசீதளன் (மாளுவதேசத்தரசன்)
7. ராஜராஜசோழன் (சோழன்)
8. பராக்கிரம வழுதி (பாண்டியன்)
9. இந்திரத்துய்மனன் ,,
10. சந்திரசேனபாண்டியன்
11. தத்தபாண்டியன்
12. பாண்டியர்
13. நாயக்க மன்னர்
14. சேதுபதிகள்

### 6. சமயாசாரியர்கள்.

1. திருஞானசம்பந்தர்
2 திருநாவுக்கரசர்
3. சுந்தரமூர்த்தி சுவாமிகள்
4 மாணிக்கவாசகர்

### 7. நாயன்மார்.

1. நின்றசீர் நெடுமாறர்
2. மங்கையர்க்கரசியார்
3. குலச்சிறையார்
4. திருநீலகண்ட யாழ்ப்பாணர்
5. சேரமான்பெருமாள்

8. சிவனடியார்.

1. திருஞானசம்பந்தருடன் வந்த பதினாறாயிரம் அடியார்கள்
2. திருநீலகண்ட யாழ்ப்பாணர் மனைவி மதங்கசூளாமணி
3. குமரகுருபர சுவாமிகள்
4. எண்ணில்லாத சிவனடியார்கள்.

## 11. சுற்றுக் கோயில்கள்.

### 1. பள்ளிமடம் காளைநாத சுவாமி கோயில்.

காளைநாதர் கோயில் எனவும் வழங்கும். கௌண்டின்ய நதியின் கிழக்கு கரையில் உள்ளது. சுவாமி பெயர் காளைநாதர், அம்மை பெயர் சொர்ணவல்லி, தீர்த்தம் பாவகரிநதி. தினசரி பூஜை நடைபெறுகிறது. சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு இந்த இடத்திலேயே இறைவன் காளைப் பருவத்தினராய்க் காட்சி தந்தார். அவர் பள்ளிகொண்டிருந்தமையால் பள்ளிமடம் என வழங்கும். பதிகம்— "தொண்டரடித் தொழலும்" எனும் பதிகம்.

### 2. சுழியற் சொக்கம்மை கோயில்.

இது ஊருக்கு வடக்கில் ஒரு குளக்கரையில் உள்ளது. மிகப் பழமையான கோயில். வடக்கு நோக்கிய சந்நிதியாக இருந்து; அம்மை பிரளய சப்தம் கேட்டுக் கீழ் திசையில் திரும்பியதால் தற்போது கிழக்கு நோக்கிய சந்நிதியாக இருக்கிறது. தினசரி பூஜை நடைபெறுகிறது.

### 3. மாரியம்மன் கோயில்.

ஷை கோயிலுக்குத் தெற்கேயுள்ளது. தினசரி பூஜை நடைபெறுகிறது.

### 4. அங்காளம்மன் கோயில்.

கீழரத வீதியில் கோயில் திருமதிலையொட்டியுள்ளது. குருநாதன் கோயில் என்றும் பெயர். செங்குந்த மரபினரால் பூசிக்கப்படுவது. உற்சவ மூர்த்தி திருச்சுழியற்

கோயிலில் இருக்கிறது. விசேட நாட்களில் பூஜை நிகழும். தீபாவளி, திருக்கார்த்திகை, சங்கராந்தி, சிவன் ராத்திரி நாட்களில் படித்தரம் கொடுக்கப்படுகிறது.
[அங்காளநாயகியும் ஐயர் குருநாதருமே—குரவைப்பாட்டு 16]

## 5. வேலடி விநாயகர் கோயில்.

கீழரத வீதியின் வடக்கிலிருந்து வடக்கு நோக்கிச் செல்லும் வீதியில் உள்ளது. தலபுராணத்தில் பாடல் பெற்றது. புராண ஆசிரியரின் வழிபடு கடவுள் என்று கூறுவர். விநாயக சதுர்த்தி முதலிய நாட்களில் வழிபாடு நிகழும்.

## 6. தேரடிக்கருப்பண சுவாமி கோயில்.

செல்வக்கருப்பணசுவாமி, சுவாமிதேர்நிலையத்தருகில் உள்ளது. உற்சவ காலங்களிலும் இரதாரோகணத்திற்கு முன் தினமும் சிறப்புவழிபாடு நிகழும். வெள்ளிக்கிழமைகள், சிவன்ராத்திரி, தீபாவளி, சங்கராந்தி, திருக்கார்த்திகை தினங்களில் படித்தரம் கொடுக்கப்படுகிறது.

## 7. ஊர்காவலப்ப சுவாமி கோயில்.

இது மேற்கு ரத வீதிக்கும் நடுத்தெருவுக்கும் இடையிலுள்ள சந்தில் உள்ளது. ஊர் காவல் செய்யும் பைரவர் கோலமூர்த்தி.

## 8. வன்னியடிக் குஞ்சரம்

முற்காலம் மேற்கு ரத வீதியில் தென்மேற்கு மூலையில் மிகப்பெரிய வன்னிமரம் இருந்ததாகவும் அதன் கீழ் இருந்த விநாயகர் என்பர். தற்போது தெற்கு கண்மாய்க் கரையில் உள்ளது அருகில் அனுமார் கோயிலும் உளது.
[கொங்காரும் வன்னியடிக் குஞ்சரமும்—குரவை 16]

## 9. சேவகப்பெருமாள் கோயில்.

இது கவுண்டின்ய நதிக்குச்செல்லும் கழுதிச்சாலையில் தென்னந்தோப்பருகேயுள்ள சாத்தா கோயிலாகும்.
[பாவகரித்துறையிற் சாத்தாவே—குரவை 1]

**10. அரைக்காசம்மன் கோயில்.**

இதுவும் கழுதிச்சாலையின் வடப்புறமுள்ளது. வழிபடுவோர்க்குக் கண்கண்ட பலனளிப்பது. இங்கிருந்து தான் தினசரி திருமஞ்சனத்தை விருதுகளுடனும், நாதசுர முழக்கத்துடனும் அழைத்து வருதல் வழக்கமாயுள்ளது.

**11. துரௌபதையம்மன் கோயில்.** [தனியார் கோயில்]

இது வடக்கு ரத வீதியும் மேற்குரத வீதியும் சந்திக்குமிடத்தில் ஆருந்திருநாள் மண்டபத்துக்கு வடக்கிலுள்ளது வயலக வேளாளர்களுடையது.

**12. கார்த்திகையப்ப சுவாமி.**

இது மதுரைச்சாலையில்— திருச்சுழி இரயில் நிலையத்துக்கு வடக்கேயுள்ளது. சிவன்ராத்திரி, திருக்கார்த்திகை, சங்கராந்தி, தீபாவளி ஆகிய நாட்களில் படித்தரம் கொடுக்கப்படுகிறது.

**13. மருதப்ப ஐயனார்.**

மருதமரத்தோப்பில் இருந்தமையால் மருதாருடைய ஐயனார் என்றுங் கூறுவர். திருச்சுழியல் கண்மாய்க்கரை தென்கோடியில் கரையின் உள்ளே உள்ளது. "ஏரியின் தலைதெக்கணத்தினில் ஐயனும்" என்தலபுராணம் கூறுகிறது. [செம்மல் மருதப்ப ஐயனொடு—பள்ளு 2.] மழைவேண்டி இம்மூர்த்திக்குச் சிறப்புவழிபாடு நிகழ்த்துவர். வழிபாடு நிகழ்ந்த அன்றே மழை பெய்து கண்மாய் நிரம்பி வழிவது கண்கூடு.

**14. வெள்ளை விநாயகர் கோயில்.**

இது கடைத்தெருவில் உள்ளது. நாடார் உறவின் முறையாருக்குச் சொந்தமானது. இக்கோயிலார் திருச்சுழியற் புராணத்தின் துதிப்பாடல்கள் அனைத்தையுந்திரட்டி ஒரு நூலாக முன்பு வெளியிட்டுள்ளனர்.

15. கரையடி விநாயகர்.

மதுரைச்சாலையில் கண்மாய்க்கரையில் உள்ளது. தனியார் ஒருவருடையது.

## அட்டலிங்கக் கோயில்கள்.

1. வெள்ளியம்பலநாதர் கோயில்:- திருச்சுழியலுக்கு மேற்கே பாறைக்குளம் கிராமத்தருகே தெற்கேயுள்ளது பன்னக சைலம். இது திருச்சுழியலுக்குக் கிரியாகும். கயிலைமலைக்கொப்பானது. "சாரல் வெள்ளியங்கயிலையே பன்னக சைலம்" என வருந்தல்புராணச் செய்யுளையும் காண்க. இங்கு தத்த பாண்டியன் மலையைக்குடைந்து ஒரு குகைக் கோயிலைச்செய்து சிவலிங்கமமைத்து வெள்ளியம்பலநாதன் எனப்பெயரிட்டு வழிபட்டான். மேற்குப் பார்த்த சந்நிதி. மற்ற வரலாறு தல புராணம் பன்னகச் சருக்கத்தில் காணலாம்.

2. கல்யாணசுந்தரர்:- திருச்சுழியலுக்கு வடக்கே கவுண்டின்ய நதியோடு மற்றொரு உபநதி வந்து கலக்கிறது. அவ்விரு நதியின் மத்தியில் கவுதம முனிவர் ஒரு சிவலிங்கந் தாபித்துக் கல்யாணசுந்தரர் எனப்பெயரிட்டு வழிபட்டார். இன்றும் இவ்விலிங்கத்தைக் காணலாம். துலாமாதத்தில் இரு நதியும் சேருமிடத்தில் மூழ்குவர். இப்பெருமானை வழிபடுவர்.

3. காலவலிங்கம்:- திருச்சுழியலுக்கு வடக்கே ஆனைக்குளம் பொட்டலுக்கும் வடக்கே யுள்ளது. காலவ இருடி தாபித்த லிங்கமாகும். இதனருகில் ஓடும் ஓடையே காலவ தீர்த்தமாகும்.

4. சோமசேகரர்:- திருச்சுழியலுக்கு வடகிழக்கில் அஞ்சானைக்குத்திக் கிராமம் கண்மாயில் உள்ளது. சந்திரசேனபாண்டியன் தாபித்தான். இங்கேயுள்ள தீர்த்தம் திரிநயன தீர்த்தமாகும்.

5. கண்ணுவலிங்கம் :- திருச்சுழியலுக்குக் கிழக்கே சப்பாணி ஏந்தல் கண்மாய்க்குத் தெற்கேயுள்ளது. கண்ணுவ முனிவர் தாபித்து வழிபட்டது. இங்கு உள்ள தீர்த்தம் கண்ணுவ தீர்த்தமாகும்.

6. காமீச்சுரலிங்கம் :- திருச்சுழியலுக்குத் தென் கிழக்கில் இலுப்பையூர் கிராமத்தருகே பரவகிரி நதியின் தென்கரையில் உள்ளது. காமனெனிய மன்மதன் தாபித்து வழிபட்ட லிங்கமாகும்.

7. கிருதாந்தேசுவரர் :- திருச்சுழியலுக்குத் தெற்கே ஆலடிபட்டி கிராமம் உள்ளது. இதற்கு வடக்கே கண்மாய் கரையில் காமாட்சியம்மன் கோயில் உள்ளது. காமாட்சியம்மன் கருவறையில் கீழே ஒரு அறையுள்ளது. இவ்வறையில் உள்ள சிவலிங்கமே கிருதாந்தேசுவரர். கிருதாந்தகன் என்ற அசுரன் தாபித்து வழிபட்டது. இவ் லிங்கத்துக்குச் சிவராத்திரி யன்று மட்டும் இரவில் பூஜை நடைபெறுகிறது. காமாட்சியம்மன் கோயிலுக்கு திருச்சுழியற் கோயிலிருந்து நித்தியப்படித்தரம் கொடுக்கப்படுகிறது. நடுத்தெருச் சைவவேளாளர்கள் குலதெய்வமாகக் கொண்டாடுவது. மாசிமாதம் சிவராத்திரிப்போது பாரிவேட்டை விழாச் சிறப்பாக நிகழ்த்துவர்.

8. தினகரேச்சுவர லிங்கம் :- அறுப்புக்கோட்டைச் சாலையில் குலசேகர நல்லூரில் உள்ளது. இக்கோயிலைச் சேர்ந்த விநாயகர் கோயில் சாலையின் வடபுறமுள்ளது. சூரியன் தாபித்து வழிபட்டது. கோயில் மிகப்பழமையானது. கல்வெட்டுகளும் உள்ளன. வன்னியர்கள் பூஜித்தனராம். காரில் செல்பவர்கள் விநாயகரையும் இக்கோயிலையும் வணங்கிக்கொண்டு செல்வர்.

மற்றவரலாறு சுழியற் புராணம் அட்டலிங்கச் சருக்கத்திற் காணலாம்.

## மடங்கள்.

1. திருநாவுக்கரசு சுவாமி மடம் :- இது மேலத்தேர் தெருவிலுள்ளது. வேளாளர்கள் திருநாவுக்கரசரது குருபூசையை நன்கு நடத்துகின்றனர்.

2 அறுபத்துமூவர் மடம் :- அருப்புக் கோட்டைச் சாலையில் இருந்தது சிலமாகிவிட்டதால், தி. அ. சு. அ. விடுதியில் தி. அ. சு. அ. வகையார் சிறப்பாக நடத்தி வருகின்றனர்.

3. சுந்தர மந்திரம் :- வடக்கு கார்த்திகை வீதியில் உள்ளது. திருவண்ணுமலையிலிருந்த ஸ்ரீ ரமணமகரிஷிகளின் பிறந்த இல்லம். அவரது பிதாவின் பெயரால் ஏற்படுத்தப் பட்டது. ரமண மகரிஷிகள் இங்கு தோன்றினமையினல் மேலை நாட்டிலும், திருச்சுழியற் பெருமை தெரியலாயிற்று.

4. மல்லம்பட்டியார் மடம் :- கீழைத்தேர் தெருவிலுள்ளது. தண்ணீர்ப்பந்தல் மடம் என வழங்கும்.

5. துவாதசிக் கட்டளை மடம் :- தெற்குத்தேர் தெருவிலுள்ளது. எர. வெங்கடபதி நாயக்கர் (சுமார் கி. பி. 1660) இக்கட்டளைக்கு கோணப்பனேந்தல் என்ற கிராமத்தை விட்டுக்கொடுத்துள்ளார்.

6. பசு மடம் :- அருப்புக்கோட்டைச் சாலையில் இருந்து சிலமாகிவிட்டது.

## சத்திரங்கள்.

1. பிடாரிசேரி சத்திரம் :- இது வடக்குக் கார்த்திகை வீதியில் உள்ளது.

2. மல்லாங் கிணறுச் சத்திரம் :- இது கீழை த்தேர் தெருவில் உள்ளது. முற்காலம் இரண்டு சத்திரத்திலும் அடியார்கட்கு அன்னம் பாலிப்பு நடைபெற்று வந்தது.

## நந்தனவனங்கள்.

1. பூமி நந்தனவனம்:- இது கோயிலுக்கு எதிரே யானைமாலுக்குக் கிழக்கே பூமி தீர்த்தத்தினருகே யுள்ளது.

2. எழுவடி நந்தனவனம் :- இது அருப்புக்கோட்டைச் சாலையில் தி. அ. சு. அ. விடுதிக்குத் தென் பகுதியிலுள்ளது.

3. தமிழ்ப்பாடி நந்தனவனம்:- இது மிகப்பெரிய நந்தனவனமாகும், தமிழ்ப்பாடி கிராமத்தருகே திருச்சுழிக் கண்மாய் முடியும் இடத்திற்கு கிழக்கே இருந்தது. பழைய சிவஸ்தல மஞ்சரிகளில் இந் நந்தனவனத்தைக் குறித்திருக்கிறார்கள்.

[இவை யாவும் சமீப காலத்தில் மறைந்து விட்டன] தற்போது தெப்பக்குளத்தைச் சுற்றியுள்ள நந்தனவனமும் கோயிலுக்குள்ளே வடக்கு ஆடிவீதியிலுள்ள நந்தனவனமுமே தற்போதுள்ளன.

## மண்டபங்கள்.

1. தவசு மண்டபம்:- இது வேலாயுத சுவாமி என்பவரால் சுமார் 200 வருடங்கட்கு முன்பு பாவகரி நதிக்கு வடக்கில் கட்டப்பட்டு இருந்தது. அது இடிந்து விட்டதால் அம் மண்டபத்தைப் பிரித்து வந்து பாகவரி நதிக்கு மேற்கே சந்நிதிக்குக் கிழக்கே தற்போதுள்ள இடத்தில் தேவஸ்தானத்தாரால் கட்டப்பட்டது. தற்போது ஆடி தவசுதினத்தில் அம்பாள் இம் மண்டபத்திலேயே எழுந்தருளி இருப்பது வழக்கம்.

2. இரண்டாந் திருநாள் மண்டபம்:- வடக்கு ரதவீதியின் வடமேற்கு மூலையில் தெற்கு நோக்கியுள்ள மண்டபம். ஆசாரியார்களின் பொது மண்டபம். இதில் இரண்டாந் திருநாள் குதிரைவாகன மண்டகப்படியைச் சிறப்பாக நடத்தி வருகின்றனர்.

3. ஆருந்திருநாள் மண்டபம் :- மேலரத வீதியின் வடமேற்கு மூலையில் கிழக்கு நோக்கியுள்ள மண்டபம். தானக்கணக்குச் சுந்தரலிங்கம் பிள்ளையவர்களால் கொடுத்த பணமும், தேவஸ்தானப் பணமும் சேர்த்து 1896ம் வருடம் கட்டி முடிக்கப்பட்டது. (முன்பு இருந்த மண்டபம் இடிந்து விட்டதால் அதை அப்புறப்படுத்தப்பட்டது) தானக்கணக்கு பரம்பரையில் சுந்தரலிங்கம் பிள்ளை குடும்பத்தினர் ஆருந்திருநாள் மண்டபத்தைச் சிறப்புற நடத்தி வருகின்றனர். திருப்பணிச் செல்வர் தி. அ. சு. அண்ணாமலை செட்டியார் அவர்கள் மேற்பார்வையில் கட்டப்பட்ட இம் மண்டபத்தின் மொத்தச் சிலவு ரூ. 2548-3-5பைசு ஆகும்.

4. திருக்கல்யாண மண்டபம் :- இம் மண்டபம் ஆஸ்தான மண்டபத்துக்கு வடக்கே வடக்கு வாசலையொட்டி கிழக்கு நோக்கியுள்ள மண்டபமாகும். முற்காலம் இம் மண்டபத்தில்தான் திருக்கல்யாணம் நடைபெற்று வந்தது. [தற்போது திருக்கல்யாணம் ஆஸ்தான மண்டபத்துக்கு தெற்கேயுள்ள மண்டபத்தில் நடைபெறுகிறது.] இம்மண்டபம் முத்துவிஜய ரகுநாத சேதுபதி [கி. பி. 1763—1772] அவர்களால் கட்டப்பட்டது. தற்போது திருப்புகழ்ச் சபையுள்ளது. இச்சபை நந்தன வருடம் சித்திரைமீ 18ந் தேதி முதல் நடைபெற்று வருகிறது. திரு. கு. முத்தையா பிள்ளை இச்சபையை நன்கு நடத்தி வருகின்றார்.

## 13. சிற்பங்கள்.

1. வெள்ளையன் சேர்வை
2. முத்துக்கருப்பன்சேர்வை
3. ஆண்டியணன் சேர்வை
4. வேலாயுத சுவாமி

இவர்களது உருவம் சுவாமி கோயில் கம்பத்தடி மண்டபம் தென்பகுதி தூண்களில் உள்ளன.

5. தாசி திருவுமுத்திருளி

அம்மன் கோயில் கம்பத்தடி மண்டபம் வடபகுதி தூணில் உள்ளது. மூச்சுப்பிடிப்பு அம்மன் என்றுங் கூறு

வர். இன்றும் முச்சுப்பிடிப்பு உள்ளவர் இவ்வம்மையைச் சுற்றி வந்தால் பிடிப்பு விட்டு விடுவது கண்கூடு.

6. அண்ணாசாமி சேதுபதி [கி. பி. 1807–1820]

ஷை மண்டபம் தென்பகுதி தூணில் இவரது உருவம் உள்ளது.

7. எர. வெங்கடபதி நாயக்கர் (சுமார் கி. பி. 1660)

அம்மன் கோயில் பள்ளியறைக்கு எதிரேயுள்ள தூணில் உள்ளது.

தவிர தூண்களில் அநேக சிற்ப வடிவங்கள் உள்ளன சுவாமி கோவில் உட்பிரகாரம் மேற்பகுதி முழுவதும் வர்ணப்பூச்சுச் செய்யப்பெற்றுள்ளது.

நடராசரது உருவம் சிலையாலமைந்தது.

## 14. தினப் பூசைகள்.

தினந்தோறும் ஆறுகால பூசைகள் நடைபெறுகின்றன. காரணம், காமீகம் என்ற சிவாகமங்களின் முறைப்படி இங்கு பூசைகள் செய்யப்படுகின்றன.

1. திருவனந்தல் காலை மணி 4–6 (திருப்பள்ளி யெழுச்சி)
2. விளாபூசை 6–7
3. காலை சந்தி 8–10
4. சிறு காலை சந்தி 10–11
5. உச்சிக்காலம் பகல் மணி 11–12
6. சாயரட்சை மாலை 4–6
7. அர்த்தசாமம் 8–9
8. பள்ளியறை 9–10

கால சந்தியிலும் சாயரட்சையிலும் ஸ்ரீ பலிநாயகர் (நித்யோற்சவர்) வலம் வருதல் நடைபெறும்.

பிரதான பூசைகள் கம்பத்தடி விநாயகர் சந்நிதியில் தொடங்கி திருவரசு விநாயகர் பூசையுடன் முடிவுறும்.

விளா பூசைக்குப்பின் தினமும் கௌண்டின்ய நதியிலிருந்து இரண்டு வெள்ளிக்குடங்களில் யானை மீது திருமஞ்சனம் கொண்டுவரப்படும்.

## மாத விசேடங்கள்.

1. மாதப் பிறப்பு :- சிறப்பு வழிபாடு நிகழும். மாலையில் சந்திரசேகரர் புறப்பாடு.

2. சோமவாரம் :- சாயரட்சையில் சிறப்பு வழிபாடு.

3. சுக்கிரவாரம் :- இரவு அம்பாளுக்கு இரட்சா பந்தனம் செய்து பல்லக்கில் கார்த்திகை வீதியில் அம்பாள் உலா வருதல்.

4. அமாவாசை;- காலையில் சுவாமி கவ்வைக்கடலில் தீர்த்தம் கொடுத்தல். மாலையில் சந்திரசேகரர் எழுந்தருளுதல். (உட்பிரகாரம்)

5. கார்த்திகை :- இரவு வள்ளி தேவயானை இருபுறமுடைய சுப்பிரமணிய சுவாமிக்கு இரட்சா பந்தனம் செய்து மயில் வாகனத்தில் கார்த்திகை வீதியில் எழுந்தருளுதல்.

6. திருவாதிரை :- நடராசரது உற்சவ மூர்த்தியை மூல நடராசர் சந்நிதியில் எழச்செய்து அபிடேகம், சிறப்பு வழிபாடு நிகழும். இங்கு மாதவாரி வரும் திருவாதிரை தில்லையின் மார்கழித் திருவாதிரைக்குரிய சிறப்புடையது. [கௌதமச் சருக்கம் செய்யுள் 45 காண்க.]

7. பிரதோடம் :- சந்திரசேகரர் சிறிய இடபத்தில் எழுந்தருளி நடுப்பிரகாரம் வழியாக மூன்று முறை வலம் வந்து வழிபாடாகி இடபதேவருக்கு [நந்தி என்று சொல்லப்படும்] சிறப்புவழிபாடு நிகழும். பின்பு சாயரட்சை நிகழும் சனிப்பிரதோட காலங்களில் சிறிய வெள்ளி இடபத்தில் சுவாமி எழுந்தருளுதல்.

## வருட விசேடங்கள்.

1. சித்திரை விசு :- (தமிழ் வருடப்பிறப்பு) மாலையில் கம்பத்தடி மண்டபத்தில் பஞ்சாங்கம் வாசித்தல் நடைபெறும். இரவு சுவாமி அம்மைக்கு இரட்சாபந்தனமாகி சப்பரத்தில் தேர் வீதியில் உலா வருதல் நிகழும்.

2. சித்திரா பௌர்ணமி :- இரவு சுவாமி அம்மை தேர்வீதியில் உலா வருதல்.

3. திரு ஆடிப்பூரம் :- அம்மைக்கு இரட்சாபந்தனமாகி ஊஞ்சல் ஆடிப்பின் தேர் வீதியில் எழுந்தருளுதல்.

4. விநாயக சதுர்த்தி :- பிருதிவி விநாயகருக்குச் சிறப்பு வழிபாடும் மற்றும் எல்லா விநாயகர் சந்நிதிகளிலும் சிறப்பு வழிபாடும் இறுதியில் யானை வழிபாடும் நிகழும். இரவில் சிறிய வெள்ளி இடப வாகனத்தில் விநாயகர் தேர் வீதியில் எழுந்தருளல்.

5. ஆவணி மூலம்:- [பிட்டுத் திருவிழா] மாலையில் சுவாமி அம்மன் சப்பரத்திலும், சொக்கர் [அர்ச்சகர்] பல்லக்கிலும், பாண்டியஅரசர் [அர்ச்சகர்] யானையிலுமாக பாவகரி நதிக்குச் சென்று பிட்டுக்கு மண் சுமந்த லீலை நடந்து தீபாராதனை முடிந்து அப்பால் தேர் வீதியில் எழுந்தருளல் [வாணியர் மண்டபம் நடத்தினால் இடபத்தில் எழுந்தருளல்.]

6. திருமலைச் சனிவாரம் :- புரட்டாசி மீ சனிக்கிழமை தோறும் சுழிகைக் கோவிந்தருக்குச் சாயரட்சையில் சிறப்பு வழிபாடு நிகழும்.

7. நவராத்திரி :- அம்பாள் சந்நதியில் ஒன்பது நாளும் அம்மை பல கோலத்தில் கொலுவீற்றிருத்தல் நடைபெறும். மூலத்தான அம்மைக்குச் சிறப்பு வழிபாடும் சகச்சிரநாம அருச்சனை வழிபாடும் நிகழும்.

8. சரசுவதி பூசை :- கோயில் கணக்குப் புத்தகங்கள் ஆயுதங்கள் இவைகளை சபா மண்டபத்தில் வைத்து உச்சிக் காலத்தில் சிறப்பு வழிபாடு நிகழும்.

9. விசய தசமி - [மானம்பு] மாலையில் சுப்பிரமணியர் குதிரை வாகனத்தில் பாவகரி நதிக்கெழுந்தருளி அம்புபோடும் லீலை நடந்து அப்பால் தேர் வீதியில் எழுந்தருளுதல்.

10. ஐப்பசி விசு :- இந்த மாத முழுவதும் காலையில் அம்பாள் சந்நிதி பள்ளியறை மண்டபத்தில் துலா காவேரி புராண விரிவுரை நடைபெறும். மக்கள் பாவகரி நதியில் தினமும் துலா முழுக்குச் செய்து பக்தியுடன் துலா மான்மியத்தைக் கேட்பர்.

11. தீபாவளி :- தீபாவளியன்று காலை எல்லா மூர்த்திகட்கும் புத்தாடை சாத்தப்படும். சிறப்பு வழிபாடு நிகழும்.

12. கந்தசட்டி : வல்லி தேவயானை இருமருங்குடைய சுப்பிரமணிய சுவாமிக்கு இரட்சாபந்தனமாகி மயில்வாகனத்தில் தேர்வீதி வலம்வந்து பின் ஆத்தான மண்டபம் வடபுறம் சூரசம்மார லீலை நடந்து அதன்பின் கோயில் சேர்தல். [செட்டியார்கள் மண்டபம் நடத்தினல் சிறப்பு வழிபாடும் 6 நாளும் புறப்பாடுநிகழும்.]

13. கார்த்திகைச் சோமவாரம் :- கார்த்திகை மாதம் ஒவ்வொரு சோமவாரமும் சாயரட்சைக்கு முன் சோமவாரச் சிறப்பு வழிபாடு நிகழும்.

14. திருக்கார்த்திகை :- கார்த்திகை மாதத்துப் பௌர்ணமி திதியோடு கூடிய கார்த்திகை நட்சத்திரத்தன்று மாலை கோவில் முழுவதும் லட்ச தீபம் போடப்படும். இரவில் சுவாமி அம்மை, விநாயகர், சுப்பிரமணியர்,

சண்டேசருடன் புறப்பாடாகி கீழைத்தேர் தெருவில் "சுட்கப்பனை" கொளுத்தி, தீபாராதனையாகி அப்பால் தேர் வீதியில் எழுந்தருளல் நடைபெறும்.

15. தனுர் மாத பூசை :- மார்கழி மாதமுழுவதும் திருப்பள்ளி யெழுச்சிச் சிறப்பு வழிபாடு நிகழும். கிராமக் கோயில்கள் யாவற்றிலும் திருப்பள்ளி யெழுச்சி பூசை நடைபெறும். கன்னிப்பெண்கள் கவ்வைக்கடல் குளத்தில் புலர் காலை நீராடிப் பார்வதி தேவியைக்குறித்துப் பாவை நோன்பு நோற்பர்.

16. ஆருத்திரா தரிசனம் :- மார்கழி மாதத்துத் திருவாதிரை நட்சத்திரத்தன்று அதிகாலை மூலத்தான நடராசருக்கு சிறப்பு அபிடேகமும் வழிபாடும் நிகழும்.

17. திருவாதிரை :- மார்கழி மாதத் திருவாதிரையன்று இரவு அம்பாளுக்கு ஊஞ்சல் உற்சவமாகி அதன் பின்தேர் வீதியில் எழுந்தருளல் நடைபெறும். [மணிவாசகர் விழா உற்சவம் என்ற தலைப்பில் காண்க.]

18. சங்கராந்தி :- [உத்தராயண புண்ய காலம்] நவபாண்டத்தில் பொங்கலிட்டு உச்சிகாலத்தில் சிறப்பு வழிபாடு நிகழும்.

19. தைப்பூசம் :- உச்சிகாலத்தில் சுவாமி அம்பாளுக்குச் சிறப்பு வழிபாடு. மாலை சுவாமி அம்பாள் தேர் வீதியில் எழுந்தருளல் நடைபெறும்.

20. மாசி மகம் :- கும்பகோணத்தில் பன்னிரெண்டு ஆண்டுக்கொரு முறையே மகாமகம் வரும். திருச்சுழியலில் ஒவ்வொரு ஆண்டுமகமும் மகாமகச்சிறப்புடையது. கவ்வைக் கடல் குளத்தில் ஒவ்வொரு மாசி மாதத்திலும் சுக்கிலபட்சப் பௌர்ணமி வரை நீர் பொங்கிக் கொண்டே வந்து பின் தினந்தோறும் சிறித் சிறிதாக இறங்கி பழைய நிலைக்கு வருதல் கண்கூடு.



அன்று காலை சுவாமியும் அம்மையும் கவ்வைக்கடல் முன் சப்பரத்தோடு கூடிய இடப வாகனத்தில் எழுந்ருளி மகத்தீர்த்தம் கொடுத்தல் நிகழ்ந்து தேர் வீதியில் எழுந்தருளல் நடைபெறும். "பேதியாக்குடந்தை வாவி தன்னினும் பெருமைத் தாமால்"—தலபுராணம்.

[தற்போது வைகாசி மாதம் விசாகத்தன்று திருப் புகழ்ச் சபையினர் பாற்குடம் எடுத்து வந்து நாயக மண்டப பிரகாரத்தில் உள்ள சுப்பிரமணியர் மூர்த்திக்கு சிறப்பு வழிபாடு நிகழ்த்துகின்றனர் திருப்புகழ்ச் சபைக்கு சுப்பிர மணியரை எழச்செய்து இரவு தேர் வீதியுலா வருதலும் நடைபெற்று வருகிறது.]

## 15. திருவிழாக்கள்.

1. ஆடித்தவசுத் திருநாள் :- இது ஆடி மாதம் நிகழும் அம்மை திருநாள். ஆடிப்பூரத்திருநாள் என்றும், முளைக் கொட்டுத் திருவிழா என்றும் கூறுவர். 10 நாட்கள் நடை பெறும் 10ம் நாள் காலை அம்பாள் தவக்கோலத்தில் பாவ கரி நதிக்கெழுந்தருளித் தீர்த்தம் கொடுத்து தவசு மண்ட பத்தில் தவக்கோலத்தில் வீற்றிருத்தல். மாலையில் சுவாமி இடப வாகனரூடராய் எழுந்தருளி பாவகரி நதியில் காட்சி கொடுத்த லீலை நிகழும் இத்திருவிழாவுக்கே மக்கள் அதிகம் கூடுகின்றனர். பின் தவசு மண்டபம் வந்து அபிடேக ஆராதனை முடிந்து சுவாமி அம்மை இருவரும் வெள்ளி இடப வாகனத்தில் தேர் வீதியில் எழுந்தருளல் நடைபெறும்.

[துணைமாலையம்மை திருச்சுழியலிலே தவஞ்செய்து சுவாமியைத் திருக்கல்யாணம் செய்து கொண்டதாக சிவஸ்தல மஞ்சரிகளில் குறித்துள்ளார்கள். ஆனல் திருச்சுழியற் புராணத்தில் இதுபற்றிய செய்திகள் இல்லை. ஆனல் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணத்தில் "மலைமகளை விரதயோக நெறி நின்று மணந்தார் சுழியல்

வியநகர்" என்று குறிக்கின்றார். "மலையான் மகள் மடமாதிட மாகத்தவன் மற்று" என்ற திருச்சுழியல் தேவார உரையும் காண்க.]

2. மாணிக்கவாசகர் திருநாள் :- [திருவெம்பாவைத் திருநாள்] இது மார்கழி மாதம் திருவாதிரை ஈருக 10 நாள் காலையில் நடைபெறுவது. காலையில் மணிவாசகரைச் சப்பரத்தில் எழுந்தருளச்செய்து நவ சந்திகளிலும் ஒன்பது திருவெம்பாவைப் பாடல்கள் ஓதி இறுதிப்பாடல்கள் முழுவதும் நடராசர் சந்நிதியில் ஓதப்பெறும். திருவெம்பாவை சத்தியை வியந்தது என்னும் பதிகம் சிருஷ்டி உலகைப் படைக்கத் தொடங்கும் அவசரம் திருப்பள்ளி எழுச்சி எனப்படும். அதற்கு முன்பு சத்திகள் காரியப்படலால் திருவாதிரை ஈருக உள்ள நாட்களை படைப்புக்கு முற்பட்ட காலமாக கருதி நவசத்தியைப் பிரேரிக்கும் காலமாகக்கொண்டு அச்சத்தியை வியக்கும் திருவெம்பாவைப் பாசுரங்களை மட்டும் ஓதுதல் வழக்கம். உலகைப்படைத்த பின்பே உலகர் பொருட்டு இறைவன் வேதாகமங்களைச் செய்தருளினன். படைப்புக்கு முற்பட்ட காலத்தில் அவையிற்றைச்செய்யவில்லை என்ற குறிப்பைப் புலப்படுத்தவே திருவெம்பாவைக் காலத்தில் வடமொழி வேதாகமங்களையும் தமிழ்த் தேவாரமாதி திருமுறைகளையும் காப்பிட்டு வைத்து விட்டு திருவெம்பாவை மட்டும் ஓதுதல் நீண்டநாள் வழக்கில் உள்ளது இக்காலம் வடமொழி வேதாகமங்களும் திருமுறைகளும் யாண்டும் ஓதுவது வழக்கின் கண் இல்லை. இதையறியாதார் பலபடக் கூறுவர்.

3. தைப்பூசத் திருநாள்:- தை மாதம் நிகழ்வது. பழநிக்குமார சுவாமி திருநாள் என்றுங் கூறுவர். 10 நாள் நடைபெறுவது. 8ம் நாள் வள்ளி தேவயானை திருக்கல்யாணம் நிகழும். தைப்பூசத்தன்று தேர் திருவிழா நடைபெறும். அன்று இரவு சுவாமி அம்பாள் தேர் வீதியில் எழுந்தருளலும் நடைபெறும்.

4. மாரியம்மன் திருநாள் :- மாசி மாதம் பூர்வபட்சம் பௌர்ணமி ஈறாக 10 நாள் நடைபெறும். கொடியேற்றமும் தேர் திருவிழாவும் இரவில் நடைபெறும். தேர் திருவிழாவன்று கிராம மக்கள் யாவரும் பொங்கலிட்டுச் சிறப்பு வழிபாடுகள் நிகழ்த்துவர். [அக்கினிச் சட்டி கரகம் முதலியன நடைபெறும்.]

5. சூரியற் சொக்கம்மை திருநாள்:- மாசி மாதம் அமர பட்சத்தில் நடைபெறும் 10 நாள் விழாவாகும். கொடியேற்றமும் தேர் விழாவும் இரவில் நடைபெறும் தேர் விழாவன்று கிராம மக்கள் பொங்கலிட்டு மகிழ்வர். [முற்காலம் பிடாரி உற்சவம் என வழங்கப்பட்டிருக்கிறது.]

6. பங்குனிமாதப் பெருந் திருவிழா :- பங்குனி பிரம்மோற்சவமாகும். உத்திரம் ஈறாக 10 நாள் நடைபெறுவது.

முகூர்த்தக்கால் :- திருவிழாத் தொடங்கு முன் ஒரு நல்ல நாளில் முகூர்த்தக்கால் கோள் விழாச்செய்தல்.

வாஸ்து சாந்தி:- கொடியேற்றத்திற்கு முதல் நாள் இரவில் செய்வது.

கொடியேற்றம் முதல் திருநாள் :- காலையில் கொடியேற்றமும், மாலையில் சுவாமி நந்தீஸ்வர வாகனத்திலும், அம்மை சிம்மவாகனத்திலும் தேர் வீதியில் பவனி வருதல்.

இரண்டாந் திருநாள் :- காலையில் சுவாமி அம்பாள் கேடகத்திலும், மாலையில் 2ந் திருநாள் மண்டபத்திற்கு எழுந்தருளி அபிடேக ஆராதனையாகி அப்பால் குதிரை வாகனத்தில் எழுந்தருளல்.

[மண்டபம் என்ற தலைப்பில் காண்க.] கேடகம்—சப்பரம்.

மூன்றாந் திருநாள் :- சுவாமியம்பாள் காலை மாலை கேடகத்தில் எழுந்தருளல்.

நான்காந் திருநாள் :- சுவாமியம்பாள் காலை பல்லக்கிலும், இரவு பூத வாகனம் அன்ன வாகனங்களில் பவனி வருதல்.

ஐந்தாந் திருவிழா :- சுவாமியம்பாள் காலை பல்லக்கிலும். இரவு கற்பக விருட்சம் காமதேனு வாகனங்களில் பவனி வருதல்

ஆறாந் திருநாள் :- காலை பல்லக்கில் உலா பின் அம்பாள் ஆறுகாற் பீடத்தில் திருஞானசம்பந்தப் பெருமானை எழச்செய்து ஞானப்பால் ஊட்டியருளிய லீலை நிகழும். பின்பு சுவாமியும் அம்பாளும் ஆறாந்திருநாள் மண்டபத்திற்கு எழுந்தருளித் தங்கல். இரவு அபிடேக அலங்கார தீபாராதனையாகி வெள்ளி இடப வாகனங்களில் புறப்பாடு அங்காளம்மன் கோயில் முன்பு திருஞானசம்பந்தர் சைவ சமயத்தை மீண்டும் நிலைபெறச்செய்த வரலாற்று லீலை நிகழும். அப்பால் வீதியில் எழுந்தருளுதல்.

[மண்டபம் என்ற தலைப்பில் காண்க.]

ஏழாந் திருநாள் :- சுவாமியம்பாள் காலை பல்லக்கிலும் இரவு கைலாச பருவதம், சேடவாகனங்களில் பவனி வருதல்.

எட்டாந் திருநாள் :- காலை கேடகத்தில் உலா வந்து ஆத்தான மண்டபத்தில் ஊடல் மாலை லீலை நடைபெறும். ஸ்ரீ பண்டாரக் கணக்கு ஸ்தானக் கணக்கர்கட்குப் பரிவட்டம் கட்டி அவர்கள் பட்டயம் வாசித்தல் நிகழும் மாலை கன்னி ஊஞ்சல் மண்டபமாகி திருக்கல்யாண மண்டபத்தில் திருக்கல்யாணம் நடைபெறும் அவ்வமயம் கவுதமர் அகலிகையையும் நேரே எழுந்தருளச்செய்து திருக்கல்யாண வைபவம் நிகழும் இரவு சுவாமி யானை வாகனத்திலும் அம்மை புட்பபல்லக்கிலும் எழுந்தருளல்.

[தற்போது சீர்பண்டாரக் கணக்கு என்றும் தானக் கணக்கு என்றும் கூறுவர். சுவடியில் ஸ்ரீ பண்டாரக்

கணக்கு என்றும் ஸ்தானக் கணக்கு என்றும் குறித்துள்ளனர். தவிர ஊடல் மாலையை மட்டையடி உற்சவம் என்றும் கூறுவர். இதன் பொருளை பிரணயகலக வர்ணனம் என்ற நூலில் காணலாம்.]

ஒன்பதாந் திருவிழா :- தேர்த்திருவிழா காலையில் ஐந்து தேர்களும் புறப்பட்டுத் திருவீதி வலம்வந்து சேர்தல். இரவு தேர்த்தடம் பார்த்தல் கேடகத்தில் எழுந்தருளல். [ஐந்து ரதத்திருவிழாத்தான் தலங்க குரவையிடீர்!]

குரவைப் பாட்டு.

பத்தாந் திருநாள் :- காலை தீர்த்தம் கொடுத்தல். இரவு இடபவாகனங்களில் சுவாமி அம்பாள் பவனி வருதல் சத்தாவரணம். இரவு கொடி இறக்கம்.

பதினோராந் திருநாள் :- இரவு கங்காளநாதர் புறப்பாடு.

உற்சவ சாந்தி :- பெருவிழாச்சாந்தி அபிடேகம், அன்னம் பாலிப்பு நடைபெறும்.

குறிப்பு :- வைகாசி வசந்தோற்சவம்:- வைகாசி வசந்தோற்சவத்துக்காக திருமலை ரகுநாத சேதுபதியவர்கள் (1647—1672) வசந்தன் கிராமத்தில் விட்டுக்கொடுத்தது. புஞ்சை நிலம் குருக்கம் 40. இந்த உற்சவம் முற்காலம் நடைபெற்று வந்த சான்றுகள் மட்டும் உள்ளன.

## 16. நிர்வாகம்.

திருச்சுழியல் பாண்டியர், சோழர், முகமதியர், விசயநகரத்தார், நாயக்கமன்னர் முதலியவர்களின் ஆட்சிக்குட்பட்டிருக்கின்றது. எனினும் கோயிற் பூசைகள், விழாக்கள் முதலியன இடையறாது நடந்து வந்திருக்கின்றன என்பதும், வேறு எவ்வித இடையூறுகளும் ஏற்படவில்லை என்பதும் அறிந்து இன்புறற்பாலது.

ஆதியில் பராக்கிரம பாண்டியன் கிராமங்களை நிபந்தமாக விட்டுக்கொடுத்திருப்பதால் பாண்டியர் காலத்திலேயே இத்தலம் மேன்மையுற்று விளங்கியது என்னலாம். பராக்கிரம பாண்டியன் என்ற பெயரில் பலர் இருந்திருப்பதால் இன்ன காலத்திய பராக்கிரம பாண்டியன் என்று வரையறுத்துக்கூற இயலாதிருக்கிறது.

கி.பி. 1605க்கு முன்பு ஒரு காலத்தில் பிற்காலப் பாண்டியர் ஒருவருக்கும் கன்னட அரசனுக்கும் நிகழ்ந்த போரில் உதவிய "பாரபிட்டி" சேதுபதி (Parabity Sethupathy) என்பவருக்கு "பாண்டிய சிம்மாசனத்தை ஸ்தாபித்தவர்" (Establisher of the Pandia Throne) என்ற பட்டமும், திருச்சுழியல், பள்ளிமடம், திருப்பூவணம் ஆகிய கிராமங்களை அளித்ததாக நெல்சன் (Nelson) துரையவர்கள் மதுரை மான்யுவலில் எழுதியுள்ளார்.

Extracts from Nelson's Madura Manual 1868:— "Afterwards when the king of Canara and the other countries invaded by the Pandya's Dominions and caused him great loss, Parabity Sethupathy came to rescue and drove back the enemy. For this service, he was given the title of establisher of the Pandya Throne and was granted the Districts of Thirushuli, Pallimadam and Thiruppuvanam"

திருமலைநாயக்கர் சரித்திரத்தை (கி.பி. 1623-1659) 1922ல் எழுதிய மு. கோவிந்தசாமி அய்யரவர்கள் இரண்டாவது மைசூர் யுத்தத்திற்கு உதவிய ரகுநாத சேதுபதி (1647-1672) அவர்கட்குத் "திருமலைச் சேதுபதி" என்ற பட்டமும் திருப்பூவணம், திருச்சுழியல், பள்ளிமடம் ஆகிய நாடுகளைக் கொடுத்ததாக எழுதியுள்ளார்.

மு. கோவிந்தசாமி ஐயர் எழுதிய திருமலை நாயக்கர் சரித்திரம் பக்கம் 37ல் "நாயக்கர் தங்களுக்கு மாத்திரமே

சுதந்திரமாயுள்ள சிம்முகச் சிவிகையையும் கொடுத்து, அவருக்குத் திருப்பூவணம், திருச்சுழியல், பள்ளிமடம் என்ற நாடுகளையும் அளித்ததோடு வருடந்தோறும் செலுத்தவேண்டிய தோப்பாப்ப பணத்தையும் வஜா செய்தார்" என்பதாகும்.

நாயக்க மன்னர்கள் சரித்திரத்தை விரிவாக ஆங்கிலத்தில் (1929ல்) எழுதியுள்ள R. சத்தியநாத அய்யரவர்கள் திருமலை நாயக்கர் சரித்திரத்தில் இது பற்றி ஒன்றும் எழுதவில்லை.

கோவில் கணக்குச் சுவடிகளிலிருந்து திருமலை ரகுநாத சேதுபதி (கி. பி. 1647–1672) அவர்கள் காலத்துக்கு முன்பு சடைக்கோத் தேவர் என்ற உடையான் சேதுபதி (கி. பி. 1605–1621) அவர்களின் ஆட்சி இருந்திருப்பதாகத் தெரிய வருவதால், நெல்சன் துரையவர்கள் எழுதியபடி கி பி.1605க்கு முன்புள்ள பாரபிட்டி சேதுபதி காலம் முதல் இக்கோயில் சேதுபதிகளின் நிர்வாகத்தில் உள்ளது என்று கொள்வதே பொருத்தமுடையது.

சேதுபதிகளின் பெருமையைக் கூறுவதெனின் அது ஒரு தனி நூலாக எழுத வேண்டியதாகும். இஞ்ஞான்றும் சேதுவேந்தர்களே அறங்காவலராக இருந்து இக்கோயிலைச் சிறப்புற ஆட்சி செய்து வருகின்றனர்.

## 17. சொத்துக்கள்.

திருச்சுழியல் கோயிலுக்கு முன்பு புராதனமாய் பராக்கிரம பாண்டிய மகாராஜா அவர்கள் பூசை நைவேத்தியம், உற்சவங்களுக்காகச் சுத்த சர்வ மானியமாக விட்டுக் கொடுத்த கிராமங்கள் :—

1. ஆலடிபட்டி
2. உடையனேர்பட்டி
3. சீராமனேந்தல்
4. பிள்ளையார் தொட்டியங்குளம்
5. பாறைக்குளம்
6. கொக்குளம்
7. சப்பாணிவேந்தல்
8. தேவரடியாள் கரிசல்குளம்
9. வேப்பிலைச்சேரி
10. தமிழ்ப்பாடி
11. ஊரணிப்பட்டி
12. பிள்ளையாரேந்தல்

பாண்டியர்களில் "பராக்கிரம பாண்டியன்" என்று பலபேர் இருந்திருப்பதால் இன்ன காலத்துப் பாண்டியன் என்று கூறுவதற்கில்லை.

திருமலை ரகுநாத சேதுபதி அவர்கள் [1647-72] திருப்பணிக்கும் பூசைக்கும் சுத்த சர்வ மானியமாக விட்டுக் கொடுத்தது:—

திருச்சுழியல் உள்கடை உள்பட கிராமம் 1 (பூசை)
(திருமேனிநாதநல்லூர்)

| | | |
|---|---|---|
| நாடாகுளம் | 1 | திருப்பணிக்கு |
| சூச்சனேரி | 1 | |
| உடைச்சி ஏந்தல் | 1 | |
| வடபாலை | 1 | |
| கருப்புக்கட்டி ஏந்தல் | 1 | |
| புது ஏந்தல் | 1 | நிர்வாகத்துக்கு |
| | ஆக கிராமங்கள் | 7 |

பள்ளிமடம் காளைநாத சுவாமி கோயிலுக்கு பூசை நைவேத்தியத்துக்கு விட்டுக்கொடுத்தது :—

முத்துராமலிங்கசேதுபதி காலம் [1763-72, 1782-95] பிரதானி - பிச்சபிள்ளை. அர்த்த சாமக்கட்டளை பூசைக்கு விட்டுக்கொடுத்தது.

| | |
|---|---|
| கல்யாணசுந்தரபுரம் | 1 |
| அஞ்சானைக்குத்தி | 1 |
| கல்லத்திக்குளம் | 1 |
| ஆக கிராமங்கள் | 3 |

ஷையார் குமாரர் முத்துக்கருப்ப பிள்ளை கார்த்திகை கட்டளை சோமவாரக் கட்டளை பூசைக்கு

தொண்டமாங்குளம் 1, குருஞ்சாக்குளம் 1.

ஆக கிராமங்கள் 2.

எர. வெங்கடபதி நாயக்கர் துவாதசிக் கட்டளைக்காக விட்டுக்கொடுத்தது. கோணப்பனேந்தல் 1.

கோபால்கிருஷ்ணய்யர் அவர்கள் உபயம்.

பழநிக்குமாரசுவாமி கட்டளை, கோயில் பூசை நைவேத்தியத்திற்கு விட்டுக்கொடுத்தது பெருமானேந்தல் 1.

ஆக கிராமங்கள் 2.

பள்ளிமடம் காளைநாத சுவாமி கோயிலுக்கு பூசை நைவேத்தியத்துக்கு விட்டுக் கொடுத்தது:—

| | | | |
|---|---|---|---|
| காளையார்கரிசல்குளம் | 1 | பறையன்குளம் | 1 |
| பிள்ளையார்நத்தம் | 1 | முத்தானேந்தல் | 1 |
| நத்தக்குளம் | 1 | | |

ஆக கிராமங்கள் 5.

திருமலை ரகுநாத சேதுபதி அவர்கள் கொடுத்த கிராமங்கள் 12 தவிர வசந்த உற்சவத்திற்காக வசந்தன் கிராமத்தில் புஞ்சை 40.

பவானி சங்கர் சேதுபதி காலம் [1726-29] மதவுடைச்சி சேர்வைகாரர் உச்சிக்கால கட்டளைக்கு விட்டுக் கொடுத்தது.

| | | | |
|---|---|---|---|
| பனையூர் | 1 | காரேந்தல் | 1 |
| ஆண்டிபட்டி | 1 | கீழகண்டமங்கலம் | 1 |

ஆக கிராமங்கள் 4.

செல்லத்தேவர் (முத்துவிஜய ரகுநாத சேதுபதி) காலம் [1749-62] முத்துக் கருப்பணன் சேர்வைகாரர் விளாபூசைக் கட்டளை பூசைக்கு விட்டுக் கொடுத்தது.

| | |
|---|---|
| புலிக்குறிச்சி (உள் கடை உள்பட) | 1 |
| கல்லு மடம் | 1 |
| ஷை உள்கடை கத்தாளம்பட்டி | 1 |
| (சிவகங்கைச் சீமை) குமுளங் குளம் | 1 |
| துணைமாலை புரம் | 1 |

ஆக கிராமங்கள் 5.

கட்டயத்தேவர் [1730-35] சுக்கிரவாரக் கட்டளை பூசைக்கு வயிரவன் சேர்வையவர்கள் விட்டுக் கொடுத்தது கிண்டுகுளம் கிராமம் 1.

இக் கிராமங்கள் 41 ஐயும் தற்காலம் தமிழக அரசினர் எடுத்துக் கொண்டு, இவற்றின் வருவாயின் மீது கொடுக்கப்படும் "தஸ்தீக் அலவன்ஸ்" வருமானத்தைக் கொண்டு நித்யப் படித்தரம், பூசை, விழா, திருப்பணிகள் முதலியன நடைபெற்று வருகின்றன.

தவிர திருவாபரணம், பட்டு பரிவட்டம், பாத்திரங்கள் முதலியன போதுமான அளவு உள்ளன தற்போதுள்ள வருமானம் சிலவு விபரங்கள் யானறிந்து எழுதுவதற்கியல வில்லை.



**Extract from the Annual Reports on South Indian Epigraphy for the years 1914 and 1936**

**List of Stone Inscriptions copied at Tiruchuli.**

List of stone Inscriptions copied by the Assistant Archaeological Superintendent for Epigraphy in 1914 in the Thirumeninathaswami Temple at Tiruchuli, Aruppukkottai Taluk, Ramnad District:

| No. | Place of Inscription | Dynasty | King | Date | Language and Alphabet | Remarks. |
|---|---|---|---|---|---|---|
| 417 | On the north wall of the Prakara of the Sahayavalli shrine in the Tirumeninatha swami Temple at TIRUCHULI Aruppukkottai Taluk, Ramnad District. | Chola | Rajakesari-Varman (Raja Raja I) | 10th year | Tamil Vatte-luttu | Fragment Gift of a lamp |
| 418 | On the same wall | do | Rajakesari Varman, who destroyed the ships at Kandalur. | 12th year | do | Fragment. |
| 419 | On the door-post of the Pralaya Vitankar shrine in the same Temple. | Pandya | | Saka 1152 | Tamil | Unfinished, Seems to refer to the defeat of a certain jananatha, |

List of stone inscriptions copied during the year 1935-36., by the Superintendent for Epigraphy, in the Pralaya-Vitankar Temple at Tiruchuli, Aruppukkottai Taluk, Ramnad District.

| No. | Place of Inscription | Dynasty | King | Date | Language and Alphabet | Remarks. |
|---|---|---|---|---|---|---|
| 192 | TIRUCHULI-Slab set up in front of the Pralaya Vitankar Temple. | Madura Nayaka | Vijaya Muttu-Chokkanatha Nayaka, son of Rangakrishna Muttu Veerappa Nayaka | Saka 1630 Sarva-dhari Kar ttigai su. 7, Monday Tiruvo-nam. | Tamil | Registers gift of lands in Nadakulam near Achaneri to the temple of Tiru-meninathaswami by Erai Venkatapati Nayaka, son of Ramanappa Nayaka, for the merit of the King. |

N. B:- இது தவிர 15–9–1959ல் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரப்பதிகமும் திருக்கோவையார் பாசுரமும் கல்வெட்டுப் பதிக்கப்பட்டிருக்கிறது.

(With the kind permission by Epigraphist of India No. 119-2521/2514 of 25-8-1954.)

## 19. திருப்பணி விவரங்கள்.

| நிர். | கோயில் மண்டபம் முதலியன | யாரால் கட்டப்பட்டது | தெரிந்த வரை கால விவரம் | ஷெரா |
|---|---|---|---|---|
| 1 | திருமேனிநாத சுவாமி கர்ப்பகிருகம் அர்த்த மண்டபம் மகா மண்டபம் | பூர்வம் பாண்டியர்களில் பராக்கிரம பாண்டியன் | | |
| 2 | உட் பிரகாரம் (நாயக மண்டப பிரகாரம்) சுற்றுமதில் | திருமலை ரகுநாத சேதுபதி அவர்கள் | கி. பி. 1647—1672 | |
| | பின்னர் உட்பிரகாரம் சுற்றுத்திருமதில் இவைகளை அழித்து தற்போதுள்ளபடி செய்ததும் தவிர மண்டபங்கட்குட்பட்ட தற்போதுள்ள தளவரிசை முழுவதும், தெற்கு ஆடிவீதி தளவரிசை, மேல் தட்டோடு வகையரா, கௌவைக் கடல் சுற்றியுள்ள காம்பவுண்டு | ஷை தேவஸ்தானம் கிராமம் லெஸியாக இருந்த தி. அ. சு. அண்ணாமலை செட்டியாரவர்கள் | கி. பி. 1918 பிங்கள ஹு தைமீ 10௳ | ஸ்ரீ பாஸ்கர சேதுபதி மகாராஜா ரூ. 40000 கொடுத்தார்கள் தேவஸ்தானம் குத்தகை ஆதாயத்திலும் இதர செட்டியார்கள் உபயத்திலும் |

| நிர். | கோயில் மண்டபம் முதலியன | யாரால் கட்டப்பட்டது | தெரிந்தவரை கால விவரம் | ஷரு. |
|---|---|---|---|---|
| 3 | ஏழு நிலைக்கோபுரம் | முத்துப்பேட்டை முத்து நாயக்கர் | ஏறத்தாழ கி. பி. 1750 | |
| 4 | கோயில் கம்பத்தடி மண்டபம் குடைவரை வாசல் வரை | செல்லத் தேவர் (சேதுபதி) காலத்தில், பிரதானி வெள்ளையன் சேர்வை மைத்துனர் முத்துக்கருப்பணன் சேர்வை | கி. பி. 1749-1762 | தென்புரம் உள்ள தூணில் முத்துக்கருப்பணன் சேர்வை உருவம் உள்ளது செலவு ரூ. 22000 |
| 5 | ஷை மண்டபம் முதல் பழனிக் குமாரர் கோயில் வரையுள்ள மண்டபம் | லோகமாதா என வழங்கிய ராணி மங்களேஸ்வரி நாச்சியார் அவர்கள் | கி. பி. 1803-1807 | |
| 6 | ஷை மண்டபம் மடப்பள்ளி வரை | சின்னச்சாமி ராஜா | கி. பி. 1749-1762 | |
| 7 | முன் ஆஸ்தான மண்டபம் | பொன்னுபாண்டி நாடார் சிவ சங்கர நாடார் 56 தேசத்தி லுள்ள நாடார்கள் பலர் உபயம். | சுமார் கி. பி. 1850 | |
| 8 | துணைமாலையம்மன் கர்ப்ப கிரகம் அர்த்த மண்டபம் ஷை கிலமான பின் தற்போ துள்ளபடி கர்ப்பக்கிரகம் | முன் பாண்டியர்களால் கட்டப்பட்டது எர. வெங்கடபதி நாயக்கர் வகை | நாயக்க மன்னர்கள் காலம் - சுமார் 1660க்குள் | |

| நிர். | கோயில் மண்டபம் முதலியன | யாரால் கட்டப்பட்டது | தெரிந்தவரை கால விவரம் | ஷரா. |
|---|---|---|---|---|
| | அர்த்த மண்டபம் பள்ளியறை முன் மண்டபம் ஆறுகால் பீடம் வரை | காருபாரு மயனம்பாடி ரெங்கப்பய்யர் அவர்கள் | | |
| 9 | அம்மன் கோயில் கம்பத்தடி மண்டபம் வடபகுதி. | திருச்சுழியல் ஆலயம் நாலாங்கொத்து உருத்திர கணிகையர்களில் திருவு கட்டியது. | கி. பி. 1800-1820 | வடபகுதி தூணில் இவர் சிலையுள்ளது |
| | ஷை மண்டபம் தென்பகுதி மண்டபம் | அண்ணுசாமி சேதுபதி காலத்தில் பிரதானியர்கள் பிள்ளையால் கட்டப்பட்டது, | கி. பி. 1807-1820 | தென்பகுதி தூணில் அண்ணுசாமி சேதுபதி சிலை இருக்கிறது. |
| 10 | அம்மன் கோயில் கம்பத்தடி மண்டபத்துக்கடுத்த திருவாச்சி மண்டபம் | முத்துராமலிங்க சேதுபதி | கி. பி. 1763-1772 | இவர் இரண்டு ரிஷபங்களும், தந்தபல்லக்கும் செய்துதந்தார். |
| 11 | பிரளய விடங்கர் கோயில் | வனமாயிரம் குதிரை கட்டியதும் பிச்சி நாயக்கர் | கி. பி. 1563-1573 | |
| | ஷை கோயில் முழுவதும் ஜீரணமாகி விட்டதினால் 1938ம்வரு ஜுன்மீ 2உ பாலாலய ஸ்தாபனம் செய்து தற்போதுள்ளபடி புதுப்பிக்கப்பட்டது. | திருப்பணி செய்தவர் தேகோட்டை மாத்தூர் கோயில் மணலூர் பிரிவு வீர. ராம. அழ. சுப்பிரமணியஞ் செட்டியார் | திருப்பணி செலவு ரூ. 40000<br>கும்பாபிஷேக செலவு ரூ. 20000<br>ஆக ரூ. 60000 | 1957வரு பிப்ரவரிமீ 4உ துன்முகிவரு தைமீ 22உ எல்லா மூர்த்திகட்கும் மருந்து சாத்தி |

| நிர். | கோயில் மண்டபம் முதலியன | யாரால் கட்டப்பட்டது | தெரிந்தவரை கால விவரம் | ஷரா. |
|---|---|---|---|---|
| | மேலை ஆடி வீதி முதல் வடக்கு மூலைவரையும், வடக்கு ஆடிவீதி வடக்கு வாசல் வரையும் தள வரிசை | ஷெயார் புதல்வர் சுப. பூமிநாதன் செட்டியார் | | கும்பாபிஷேகம் நடந்தது. |
| 12 | அண்டம் பிரண்ட விநாயகர் கோயில் (மேல ஆடி வீதி மூலையில்) வடமேற்கு மூலை சுப்பிரமணியர் கோயில் | வனமாயிரம் குதிரை கட்டியவர் பிச்சி நாயக்கர் | கி. பி. 1563-1573 | |
| 13 | பெரிய திருமதில் கிழமேல் தச்சு முழம் 111. தென்வடல் 106. | முத்துராமலிங்க சேதுபதி அவர்கள் ஆட்சியில் பிரதானி முத்திருளப்ப பிள்ளை அவர்கள் | கி. பி. 1763-1772 கி. பி. 1772-1795 | மொத்தம் திருமதில் செலவு ரூ. 36814 சில்லரை |
| 14 | திருக்கல்யாண மண்டபம் | முத்துவிஜயரகுநாத சேதுபதி | கி. பி. 1763-1772 | திருக்கல்யாணம் நடந்து வந்தது தற்போது திருப்புகழ் சபை உள்ளது. |
| 15 | தபசு மண்டபம் | ஆத்தங்கரை வேலாயுத சுவாமிகள் | | பாவகரி நதிக்கு வடக்கே கட்டி இருந்தது கிலமாகி விட்டதால் அதைப் பிரித்து வந்து தற்போது சந்நதிக்கெதிரில் பாவகரி நதிக்கு மேற்கே தேவஸ்தானத்தில் |

| நிர் | கோயில் மண்டபம் முதலியன | யாரால் கட்டப்பட்டது | தெரிந்தவரை கால விவரம் | ஷரா |
|---|---|---|---|---|
| 15 | | | | கட்டப்பட்டுள்ளது. தபசு விழா இந்த மண்டபத்தில் நடந்து வருகிறது. |
| 16 | ஆருத்திருநாள் மண்டபம் | | | மண்டபம் என்ற தலைப்பில் காண்க. |
| 17 | அம்மன் வாசலடியின் தாமரை சிற்பம் | லக்ஷ்மண மூப்பன் அய்யன் மூப்பன் | கி. பி. 1852 | |
| 18 | அம்மன் கோயில் தள வரிசை | பலர் உபயம். | | |
| 19 | சுவாமி கோயில் ஸ்தூபி | | கி. பி. 1810 | தங்கமுலாம் செய்து கும்பாபிஷேகம் நடந்தது |
| 20 | அம்மன் கோவில் ஸ்தூபி | அண்ணாசாமி சேதுபதி ஆட்சியில் பிச்சபிள்ளை அவர்கள் | கி.பி. 1807–1820 | |
| 21 | கௌவைக் கடல் வடக்கு மதில் முதல் சுவாமி சந்நிதி படித்துறை வரை | ஆதியில் திருநெல்வேலியைச் சேர்ந்த பெத்து நாயக்கர் | கி. பி. 1824 | |
| 22 | மீதப்பகுதி | முத்துப்பேட்டை முத்து நாயக்கர் | | இதில் 4 கால் மண்டபமாக இருந்ததை 16 கால் மைய மண்டபமாக கட்டினர் |
| 23 | பழனிக்குமாரு சுவாமி கோயில் | | கி.பி. 1807–1820 | |

| நிர் | கோயில் மண்டபம் முதலியன | யாரால் கட்டப்பட்டது | தெரிந்தவரை கால விவரம் | ஷரா |
|---|---|---|---|---|
| 24 | சுழிகை சொக்கம்மை கருப்பக்கிரகம் | பாண்டியர்களால் உண்டானது | | |
| | ஷை முன் மண்டபம் திருமதில் | ,, | | |
| 25 | மாரியம்மன் கோவில் | ,, | | |
| 26 | சுழிகை அம்பல மண்டபம் ஆஸ்தான மண்டப குடவரை | வனமாயிரம் குதிரை கட்டியதும் பிச்சி நாயக்கர் | இ.பி. 1563–1573 | |
| 27 | அங்காளம்மன் கோயில் | முத்துவீரப்ப முதலியார் வகையரு பலர் உபயமாகக் கட்டியது | | |
| | | அங்கப்ப முதலியார் கல்கிணறு கட்டியது | | |
| 28 | தேரடி கருப்பண சுவாமி கோயில் | கோயில் ஸ்தானிகம் செண்பககண் பட்டரவர்கள் கட்டி பிரதிஷ்டை செய்தது | | |
| 29 | பள்ளிமடம் காளிநாத சுவாமி கோயில் | பாண்டியர் | | |
| 30 | கண்மாய்ப் படித்துறை | சிவபரங்கிரி செட்டி | | |
| 31 | அம்மன் கோயில் பெரிய திருவாச்சி | தமிழ்ப்பாடி பெரிய வீட்டார் | | |
| 32 | தெப்பக்குளம் தென்பகுதி தள வரிசை | தேவஸ்தானத்தார் | 1967 | |

வைரத்தேர் மூன்றும் 100 வருஷங்களுக்கு முன் திருநெல்வேலி சுப்பிரமணிய ஆசாரி என்பவரால் செய்யப் பட்டது.

பட்டயத்தில் திருப்பணி செய்தவர்கள் பெயர்கள் உள்ளன. அதில் சிலர் என்ன திருப்பணி செய்தார்கள் என்பது புலப்பட வில்லை. அவர்கள் பெயர்கள் வருமாறு:-

திருவிருந்தபெருமாள் பிள்ளை
சிவசங்கரம் பிள்ளை
வைத்திலிங்க முதலியார்
மதவுடச்சி சேர்வைக்காரன்
மைனம்பாடி ரெங்கப்பய்யர்
சின்னவில்லி
இருளப்பசேர்வைகாரன்
ஆண்டியப்ப பிள்ளை
முத்துகாமாக்ஷியா பிள்ளை
முத்துதேரபாப்புத் தேவர்
பிச்ச பிள்ளை
வேலாயுதம் பிள்ளை
முத்துக்கருப்ப பிள்ளை
அய்யப்பன் செட்டி
தாண்டவன் செட்டி
தில்லைசெட்டி
முதலானோர்.

## 20. தலத்தைப் பற்றிய நூல்கள்

1. திருச்சுழியற் புராணம். ஆசிரியர் ஆராவமுதாசாரியர் 600 செய்யுட்கள். முதற் பதிப்பு 1895 ஷு (ஜயஷு தைமீ) வெளியிட்டவர் தி. அ. சு. அண்ணாமலை செட்டியார். ஆய்ந்துதவியவர், தாமோதரபுரம் சுப்பிரமணிய பிள்ளை.

2. திருச்சுழிற் புராணம் ஷை அண்ணாமலை செட்டியாரால் இரண்டாம் பதிப்பு வெளியிடப்பட்டது. யாழ்ப்பாணம் அம்பலவாண நாவலரால் காளையார் காட்சிசருக்கம் (149 பாடல்) பாடிச்சேர்க்கப்பட்டது. மற்றவை புராண ஆசிரியர் வரலாற்றிற் காண்க. (1901 ஐப்பசி)

3. திருச்சுழியல்வெண்பா அந்தாதி உரையுடன் (1912) ஆசிரியர் சென்னை இந்து ஞான போதினி பத்திராபர் திருக்கண்ணபுரம் பண்டிதர் "பாலசரஸ்வதி"

P. R. கிருஷ்ணமாச்சாரியார் ( கி. பி. 1876–1922 ) இதனை அவரே பாடி, ஆசிரியர் இன்னாரெனத்தெரிய வில்லை எனப் பதிப்பித்துள்ளார்.

4. திருச்சுழியற்கொம்பிலாவெண்பா அந்தாதி-ஆசிரியர் வித்வான் தாமோதாபுரம் சுப்பிரமணியபிள்ளை 1918 (பிங்கள௵ தைமீ 10உ கும்பாபிஷேக வெளியீடு) ஆராய்ந்துதவியவர் தேவகோட்டை சொ. வேலுச் சாமிக் கவிராயர்.

5. துணைமாலையம்மை பிள்ளைத்தமிழ் ( குறைநூல் ) ஆசிரியர் தெரியவில்லை.

6. திருச்சுழியற் குரவைப்பாட்டு (குறைநூல்) ஆசிரியர் தெரியவில்லை.

7. திருச்சுழியற் பள்ளு ௸

8. திருச்சுழியற்கயிற்றுப்பின்னல். ஆசிரியர் திருச்சுழியற் குமாரகவிராயர்.

[ 5 to 8 ஆகிய நான்கு நூல்களும் சேர்த்து 1939ல் சென்னை தணிகைமணி திரு வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள் குறிப்புரையுடன் திறம்படப்பதிப்பித் துள்ளார் ]

9. துணைமாலையம்மை பிள்ளைத்தமிழ் (5 to 8) இரண்டாம் பதிப்பு 1965. கோவை கவியரசு நடேசக் கவுண்டரவர் களால் பிள்ளைத்தமிழ் (44) குறைப்பாடல்களைப் பாடச் செய்து தேவஸ்தானத்தார் வெளியிட்டுள்ளனர்.

10. திரிசூலபுர மகாத்மியம் (உரைநடை) திருவண்ணாமலை ஸ்ரீ ரமணாச்ரமம் வெளியீடு (வடமொழித் திரிசூலபுர மான்மியத் தமிழ் மொழிபெயர்ப்பு)

11. திருச்சுழியற் புராணத் தோத்திரத்திரட்டு. கடைத் தெரு வெள்ளை விநாயகர் கோவிலார் வெளியிட் டுள்ளனர்.

12. திருச்சுழியல் ஆடித்தவசு வழி நடைச்சிந்து அச்சேறியுள்ளது. பிரதிகள் கிடைக்கவில்லை.
ஷை 11 & 12 நிர் நூல் பிரதிகள் வைத்திருப்பவர்கள் பிரதி தந்து உதவ கேட்டுக்கொள்கிறேன்.

## 21. இலக்கியம்

உ

திருச்சிற்றம்பலம்
திருச்சுழியல் தேவாரம்.

ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளிச் செய்தது.
பண் : நட்டபாடை

ஊனாய் உயிர்புக லாயக லிடமாய் முகில் பொழியும்
வானாய்வரு மதியாய் விதிவருவானிடம் பொழிலின்
தேனா தரித் திசைவண்டின மிழற்றுந்திருச்சுழியல்
நானா வித நினைவார்தமை நலியார் நமன்தமரே. VII 82-1

பதவுரை :

ஊனாய் – உயிர் தங்குதற்கு இடமாகிய ஊனாகியும் உயிர்புகலாய் – உயிர்க்குப் புகலிடமாயும், உயிராகியும் அவவுயிர்க்குப் புகலிடமாயும் எனவும் கொள்ளலாம். அகலிடமாய் – (பஞ்ச பூதங்களில் ஒன்றாகிய) அகன்ற நிலமாயும், முகில் – மேகங்கள். பொழியும் – பொழிகின்ற (உலகுக்குப் பொழிந்து உதவுகின்ற) வானாய் – மழையாகியும், வருமதியாய், வரும் – எழுகின்ற. மதியாய் – அறிவாகியும், விதி – விதியாகவும், வருவான் – வருகின்ற பெருமான், இடம் – வீற்றிருக்கும் இடமாகிய, பொழிலின் – பொழில்களிலுள்ள, தேன் – தேனை, ஆதரித்து – விரும்பி, இசை – இசையொலியை, வண்டினம் – வண்டின் கூட்டங்கள், மிழற்றும் – ஒலிக்கின்ற, திருச்சுழியல் – என்னும் தலத்தை, நானாவிதம் – பலபலவிதமாக, நினைவார்தமை – நினைப்பவரை, நமன் – யமனுடைய, தமர் – தூதர்கள், நலியார் – வருத்தமாட்டார்.

பொழிப்புரை :

ஊனாகியும், உயிராகியும், உயிர்க்குப் புகலிடமாயும், நிலமாகவும், நிலத்தை ஆதரிக்கும் மழையாகவும், மதியாகவும், விதியாகவும் உள்ள பெருமானது இடமாகிய திருச்சுழியலை, பொழில்களில் உள்ள தேனை உண்ண விரும்பி வண்டின் கூட்டங்கள் இசைமிழற்றும் திருச்சுழியலை எக்காரணத்தால் நினைத்தாலும் அங்ஙனம் நினைப்பவர்களை யமதூதர்கள் வருத்தமாட்டார்கள்.

குறிப்புரை :

"ஊனாகி உயிராகி" – திருவாசகம் திருச்சதகம் 15. வான் – மழை. வான்மடி பொழுதில் – பெரும் பாணாற்றுப் படை 107. விதிவருவான் – ஊழாகி வருபவன் "கதியாய் விதியாய் குருவாய் வருவாய்" கந்தரனுபூதி. "விதியாய் விளைவாய்" – சம்பந்தர் தேவாரம் I 30–1. மதியாய் வருதல் – "மதியுமாம் மழபாடியுள் நாதன் நற்பாதமே"– சம்பந்தர் தேவாரம் திருமழபாடி III 48-2. நினைத்தாலே பலன் தரும் திருச்சுழியல் – என்றதனாலே திருச்சுழியல் நினைத்தால் முத்தி தரும் திருவண்ணாமலையை நிகர்க்கும் என்பது தெளிவுறப் பெறப்படுகின்றது. இதுபற்றியோ திருச்சுழியலில் தோன்றிய ஸ்ரீ ரமணமுனிவர் வேறு தலத்தை நாடாது திருவண்ணாமலையை இருப்பிடமாகக் கொண்டனர் போலும்.

ஒரு தலத்தில் வீற்றிருக்கும் இறைவனையேயன்றி அத்தலத்தைப் போற்றுதலே புண்ணியச் செயலாம். அதுபற்றியே – 'திருச்சுழியல் இறைவனை' என்னாது "திருச்சுழியல் நினைவார் தமை" என்றார். ஆரூரைப் பத்திமலர் தூவமுத் தியாகுமே" என்றார் சம்பந்தரும் [I 91–1] நானாவிதம் நினைவார் – யாது காரணம் கொண்டு நினைத்தாலும் நமன்றமர் நலியார்.

> தண்டேர் மழுப்படையான் மழவிடையானெழு கடனஞ்
> சுண்டேபுர மெரியச்சிலை வளைத்தானி மையவர்க்காத்
> திண்டேர் மிசை நின்றானவனுறையுந் திருச்சுழியல்
> தொண்டேசெய வல்லாரவர் நல்லார் துயரிலரே. VII 82–2

ப-ரை. தண்டு—தண்டாயுதமும், ஏர்—அழகிய, மழுப் படையான் – மழு ஆயுதத்தையும் உடையவன், மழ – இளமை வாய்ந்த, விடையான் – இடபவாகனத்தை உடையவன், எழுகடல் நஞ்சு – கடல் எழு நஞ்சு—கடலில் தோன்றிய நஞ்சை (விஷத்தை) உண்டே – உண்டும், புரம் – திரிபுரங்கள், எரிய – எரியும்படி, சிலே – வில்லே, வளைத்தான் – வளைத்தவனும், இமையவர்க்கா(க) – தேவர் களுக்காகத், திண் – வலிய, தேர்மிசை—தேர்மீது, நின்றான வன் – நின்றவனுமான (சிவன்) உறையும் – வீற்றிருக்கும், திருச்சுழியல்—திருச்சுழியல் என்னும் தலத்தில், தொண்டே செய – தொண்டுகள் செய்ய, வல்லாரவர் – வல்லவர்கள், நல்லார் – நல்லவர்கள், துயரிலரே – துயர் இல்லாதவரா வார்.

பொ – ரை.

தண்டு மழு என்னும் படைகளை உடையவன், இளைய எருதை வாகனமாகக் கொண்டவன், கடல் நஞ்சை உண்டவன், இமையவர் பொருட்டுத் தேரேறிப் புரமெரிய வில்லை வளைத்தவன்' உறையும் திருச்சுழியலில் தொண்டு செய்யவல்லவர்கள் நல்லவர்கள். துயரில்லாதவர்கள்.

கு – ரை.

தண்டு – சிவபிரானுக்குத் தண்டும் ஒரு ஆயுதம். "தண்டொடு சூலந் தழைய ஏந்தி" – சம்பந்தர் தேவாரம் திருவலஞ்சுழி III *105-6*. திரிபுரம் எரித்த ஞான்று "வானோர் எல்லாம் ஒரு தேராய்" (சம்பந்தர் திருவீழி I *11-6*) சமைந்தாராதலின் "திண்தேர்" என்றார். "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்னும் அப்பர் திரு வாக்கின் உண்மை தெரிந்து "தொண்டே செய வல்லார்" என்றார். இப்பாடலால் திருச்சுழியலில் அரன் திருப்பணி, அடியார்க்குத் திருப்பணி முதலியன செய்தலின் பேறும் சிறப்பும் தெரிகின்றன.

3 கவ்வைக்கடல் கதறிக்கொணர் முத்தங்கரைக் கேற்றக்
கொவ்வைத்துவர் வாயார் குடைந்தாடுந் திருச்சுழியல்
தெய்வத்தினை வழிபாடுசெய் தெழுவார்அடி தொழுவார்
அவ்வத் திசைக் கரசாகுவர் அலராள் பிரியாளே. VII 82-3

ப – ரை :

கௌவைக் கடல் – ஒலிக்கும் கடல் போன்ற "கௌவைக்கடல்" என்னும் தீர்த்தம், கதறி – ஒலித்து, கொணர் – கொண்டு வரும், முத்தம் – முத்துக்கள், கரைக்கு – கரையில், ஏற்ற – ஏறிவரும்படி, கொவ்வை – கோவைப்பழம் போலச் சிவந்த, துவர் – பவள நிறத்த, வாயார் – வாயைக் கொண்ட பெண்கள், குடைந்து – திளைத்து: ஆடும்–நீராடும், திருச்சுழியலில் வீற்றிருக்கும், தெய்வத்தினை – தெய்வமாம் சிவபிரானை, வழிபாடு செய்து எழுவார் – வழிபட்டெழுகும் ஒழுக்கத்தவருடைய, அடி – திருவடியைத், தொழுவார் – தொழுபவர்கள், அவ்வத் திசைக்கு – அந்த அந்த திசைக்கு (அவரவர் இருக்கும் இடத்துக்கு) அரசாகுவர் – அரசாட்சி புரியும் பதவியை எய்துவர், அலராள் – இலக்குமி, பிரியாள் – அவர்களை விட்டுப் பிரிய மாட்டாள்.

பொ – ரை :

கௌவைக்கடல் என்னும் தீர்த்தத்தில் (சங்குகள்) ஈனும் முத்தங்கள் கரைக்கு ஏறும்படிப் பெண்கள் திளைத்து விளையாடும் திருச்சுழியற் பெருமானை நியமத்துடன் வழிபடுவோரது அடியைத் தொழுபவர் அவரவர் வாழும் திசையில் அரசபதவியை எய்துவர்; அவர்களை விட்டு இலக்குமி பிரியாள்.

கு – ரை :

கவ்வைக்கடல் – திருச்சுழியலில் கோயிலுக்கு எதிரில் உள்ள தீர்த்தம். "ஒலிப்புணரி" என்றுர் சுழியற் புராணத்தில். கொவ்வைத்துவர்வாயார் – "கொவ்வைச் செவ்வாய்" "செந்துவர்வாய்" – திருவாசகம் 6–2, 9–13.

4 மலையான் மகள் மடமாதிட மாகத்தவண் மற்றுக்
கொலையானையின் உரிபோர்த்த எம்பெருமான் திருச்சுழியல்
அலையார்சடை யுடையான்அடி தொழுவார் பழுதுள்ளம்
நிலையார் திகழ் புகழால்நெடு வானத்துயர்வாரே. VII 8-4

ப – ரை :

மலையான் மகள் – இமயராசன் மகளாகிய, மடமாது– மடப்பம் பொருந்திய மாதாகிய பார்வதி, இடம் ஆகத் தவள் – உடம்பில் இடது பாகங் கொண்டவளாக, மற்று – பின்னும், கொலை – கொலைக்குணம் உடைய, யானையின் – யானையினுடைய, உரிபோர்த்த – உரித்த தோலைப் போர்த்த, எம்பெருமான் – எமது பெருமான், திருச் சுழியல் – திருச்சுழியலில் வீற்றிருக்கும், அலையார் சடை யுடையான் – அலைவீசும் கங்கையைச் சடையில் உடையவன், (ஆகிய சிவனது) அடி – திருவடியைத், தொழு வார் – தொழுபவர், உள்ளம்-உள்ளத்தில், பழுது குற்றங் கள், நிலையார் – நிலையாதவராவார்; திகழ் – விளங்கும், புகழால் – புகழால், நெடுவானத்து – நீண்ட வானுலகில், உயர்வார் – மேம்பட்டு விளங்குவார்.

பொ-ரை :

மலை மகளை இடப்பாகத்தே கொண்டு, யானையின் தோலைப் போர்த்து, அலை வீசும் கங்கையைச் சடையில் தரித்த திருச்சுழியற் பெருமானது திருவடியைத் தொழு பவருடைய உள்ளத்தில் குற்றம் நிலைபெறாது; அதாவது அவர்கள் உள்ளம் எப்போதும் பரிசுத்தமாய் இருக்கும். (தூய்மையாய் இருக்கும்); அவர்கள் புகழுடன் வானுலகில் மேம்பட்டு விளங்குவர்.

கு–ரை :

பழுது – குற்றம் "பழுது செய்வேனை விடேல்" – திருவாசகம் 6–44 சிவபெருமான் தம்மை மணம் புரிய வேண்டிப் பார்வதி தேவியார் பூசித்ததலம் திருச்சுழியலா தலின், மலைமகள் இடப்பாகங் கொண்ட வரலாற்றைக் கூறினார். "மலைமகளை விரத யோக நெறி நின்று மணந் தார் சுழியல் வியனகரும்"– திருவிளை 32

5. உற்றான் நமக்குயரும் மதிச் சடையான்புலன் ஐந்தும்
செற்றார்திரு மேனிப்பெரு மான்ஊர் திருச்சுழியல்
பெற்றான் இனி துறையத்திறம் பாமைத்திரு நாமம்
கற்றாரவர் கதியுட் செல்வர் ஏத்தும்மது கடனே VII-85-5

ப—ரை :

நமக்கு உற்றான் – நமக்கு உறுதுணையாக உள்ளவனும் உயரும் – வளரும் பெருமை வாய்ந்த, மதிச்சடையான் – பிறைசூடிய சடைப் பெருமான், புலன் ஐந்தும் – ஐம்புலன்களையும், செற்றார் திருமேனிப் பெருமான் – வென்றுமேம்படும் திருமேனி நாதன், ஊர் இனிது உறைய – இனிமையுடன் உறைவதற்கு ஊராக, திருச்சுழியல் பெற்றான் – திருச்சுழியல் என்னும் தலத்தைப் பெற்றவனது, திருநாமம் – திருநாமத்தைத், திறம்பாமை – தவறாத வண்ணம், கற்றாரவர் – கற்றவர்கள், கதியுட் செல்வர் – நற்கதி புகுவர்; (ஆதலால்) ஏத்து(ம்)மது – அவர் நாமத்தை ஏத்துவது, கடனே – நமது கடமையாகும்.

பொ—ரை :

நமக்கு உற்றவரும், மதிச்சடையரும், புலன்களை – வென்றவருமான திருமேனிப் பெருமானார் திருச்சுழியலைத் தாம் இனிது உறைவதற்கு இடமாகப் பெற்றார். அவரது திருநாமத்தைத் தவறாது கற்றவர்கள் நற்கதிபுகுவர். ஆதலால் அவர் (நாமத்தை) ஏத்துதல் நமது கடமையாகும்.

கு—ரை :

திருமேனிப் பெருமான் – திருச்சுழியலில் சுவாமி திருநாமம். இறைவர் புலனைந்தும் வென்றவர்–"புலன்கள் வென்றவன் எம்இறைவன்" – சம்பந்தர் தேவாரம் திருவெண்டுறை III-61-7

திருநாமம் கற்பதின் பலனை

"மருந்தவை மந்திரம் மறுமை நன்னெறியவை
மற்றுமெல்லாம், அருந்துயர் கெடுமவர் நாமமே
சிந்தைசெய் நன்னெஞ்சமே"– எனவரும் சம்பந்தர்
தேவாரத்தில் (திருநெல்வேலி-III 92-1) காண்க.

6. மலந்தாங்கிய பாசப்பிறப் பறுப்பீர் துறைக்கங்கைச்
சலந்தாங்கிய முடியான் அமர்ந்திடமாந் திருச்சுழியல்
நிலந்தாங்கிய மலராற் கொழும்புகையால் நினைந்தேத்தும்
தலந்தாங்கிய புகழாம்மிகு தவமாம் சதுராமே VII-82-6

ப—ரை :

மலம் – மும்மலங்களை, தாங்கிய – கூடிய (பெற்ற) பாசப்பிறப்பு – ஆசைகளுக்கு இடமாகிய பிறப்பை, அறுப்பீர் – அறுக்க விருப்புபவர்களே! துறைக் கங்கைச்சலம் – துறைகளோடு கூடிய கங்கை நதியை, தாங்கிய – சுமக்கின்ற, முடியான் – திருமுடியுடையவர், அமர்ந்திடமாம்– அமர்ந்துள்ள இடமாகிய – திருச்சுழியலை, நிலம் – பூமியில், தாங்கிய – உள்ள, மலரால் – பூவாலும், கொழும் – செழுமையுள்ள, புகையால் – அகில் முதலிய வாசனைப் புகையாலும், நினைந்து – தியானித்து, ஏத்தும் – ஏத்துங்கள் (துதியுங்கள்) (அதனால்) – தலம் தாங்கிய – பூமியில் நிலைக்கும்படியான, புகழால் – புகழினால், மிகு – மிக்க, தவமாம் – தவமாகும், சதுராம் - சதுராகும் (அறிவு வழியாகும்)

பொ - ரை :

மும்மலங்களையும், பாசப்பிறப்பையும் அறுக்க விருப்புகின்றவர்களே! கங்கை தங்கிய முடியர் வீற்றிருக்கும் திருச்சுழியலை மலர் கொண்டும் நறும்புகை கொண்டும் நினைந்து போற்றுங்கள், அதுவே புகழுக்கு வழியாம் தவமாம், நல்லறிவாம்.

கு—ரை :

'நிலம்' என்பதை எழுவாயாகக் கொண்டு – நிலம் – பூமி தேவி எனப் பொருள் கொண்டு, பூமிதேவி மலராலும் புகையாலும் ஏத்தி வழிபட்டனள் – என்னுங்குறிப்பு மூன்றும் அடியில் அமைந்துள்ளது. திருச்சுழியல் பூமி தேவி பூசித்ததலம் அதனால் அத்தலத்து இறைவனுக்குப் பூமிநாதன்" என்ற பெயர் உண்டு. மலராலும் புகையாலும் ஏத்துதல் சிறந்த வழிபாடு.

"போதுஞ் சாந்தும் புகையும் கொடுத்தவர்க்
கேதம் எய்துதல் இல்லையே" - சம்பந்தர் தேவாரம்

திருவேற்காடு 1-57-3

நிலந்தாங்கியபூ - நிலப்பூ. நினைந்தேத்தும்-தவமாம் -சதிராம் பிறப்பறுப்பீர் - பிறப்பை அறுப்பீர்கள்-எனவும் முடிக்கலாம்.

7 சைவத்தசெவ் வுருவன்திரு நீற்றன்னுரு மேற்றன்
கைவைத்தொரு சிலையால்அரண் மூன்றும்மெரி செய்தான்
தெய்வத்தவர் தொழுதேத்திய குழகன் திருச்சுழியல்
மெய்வைத்தடி நினைவார் வினைதீர்தல் லெளிதன்றே. VII 8?-7

ப-ரை :

சைவத்த - சைவம் விளங்கும், செவ்வுருவன் - செந்நிறத்தன், திருநீற்றன் - திருநீறு விளங்குபவன், உருமு ஏற்றன் - இடிபோன்ற குரலினை உடைய ஏற்றினை உடையவன், கை - கையில், வைத்த - வைத்துள்ள, ஒரு - ஒரு, சிலையால் (மேருமலை) வில்லால், அரண் மூன்றும் - மதில் மூன்றும் (முப்புரத்தையும்) எரிசெய்தான் - எரித்தவன்; தெய்வ - தெய்வத் தன்மை வாய்ந்த, தவர் - முநிவர்கள், தொழு தேத்திய - தொழுது வணங்கிய குழகன் - என்றும் இளையோனும் (சிவன்) வீற்றிருக்கும் - திருச்சுழியலை, மெய்வைத்து - உண்மையுடன் அடிநினை வார் - ஆழ்ந்து நினைப்பவருடைய, வினை - வினைகள், தீர்தல் - ஒழிதல், எளிதன்றே - எளிதாகும்.

பொ-ரை :

சைவத்திருவுருவத்தை உடையவனும், திருநீறுபூசு பவனும், இடியன்ன குரலையுடைய விடையை வாகனமாக உடையவனும், கைவில்லால் மதில் மூன்று எரித்தவனும் தெய்விகமுநிவர்கள் தொழுது வணங்கும் பெருமானுமான (சிவனது) திருச்சுழியலை உண்மையுடன் உள்ளத்தில் ஆழ வைத்து நினைவோர்தம் வினையொழிவது எளிதாம்.

கு-ரை :

திருச்சுழியலை மெய்வைத்து – பெருமானது அடி நினை வார் – எனவும் கொள்ளலாம். மெய்வைத்து – உடலிடங் கொள்ளவைத்து – உட்கொண்டு, திருச்சுழியல் குழகன் அடி மெய் வைத்து நினைவார் (உண்மையுடன் நினைவார்) என மாற்றியும் பொருள் காணலாம். தெய்வத்தவர் – தேவர் எனலுமாம். சைவத்திருவுருவன் திருநீற்றன் – ''வெண்ணீறும் சைவம் விட்டிட்ட சடைகளும்'' – திரு விசைப்பா 6–4. உருமு ஏற்றன் – (இடியார் குரலேறுடை எந்தை) சம்பந்தர் தேவாரம் – சீகாழி I 34–3.

8 பூவேந்திய பீடத்தவன் றனும்மடலரியும்
கோவேந்திய வினயத்தொடு குறுகப்புகலறியார்
சேவேந்திய கொடியானவன் உறையுந்திருச்சுழியல்
மாவேந்திய கரத்தான்எம சிரத்தான்றனதடியே. VII-82-8.

ப - ரை :

சே – இடபத்தை, ஏந்திய – கொண்ட, கொடியான வன் – கொடியைக் கொண்ட சிவன், உறையும் – வீற்றி ருக்கும் திருச்சுழியல் – திருச்சுழியலில் வீற்றிருக்கும், மா ஏந்திய கரத்தான் – மான் ஏந்திய திருக்கரத்தான், எம சிரத்தான் – எமது சிரத்தில் இடங்கொண்டவனது, அடி – திருவடியையும், அவன் உறையும் திருச்சுழியலையும், பூ ஏந்திய பீடத்தவன் – தாமரைப்பூவை தமதிடமாகக் கொண்ட பிரமனும், அடல் – வலிமை பொருந்திய, அரியும் – திருமாலும், கோ ஏந்திய வினயத்தொடு – தலை சிறந்த தாழ்மையோடு; குறுக – அடையும்படி, புகல் – புகும் வழியை, அறியார் – அறியாதவர்களானார்கள்.

பொ – ரை.

இடபக்கொடி உடையவனும், மானேந்திய கரத்தா னும், எமது சிரத்தில் உறைபவனுமாகிய சிவன் வீற்றி ருக்கும் திருச்சுழியலையும், அவன் திருவடியையும் பிரம னும் திருமாலும் தலையாய வணக்கத்துடன் அணுக அறியாது போனார்கள்.

கு – ரை.

"சேவேந்து வெல்கொடியானே என்னும்" திருவிசைப்பா. மா ஏந்தியகரம். "மானை ஏந்திய கையி னர்" – அப்பர் – V – 52–7 (திருநாகேச்சுரம்). எமசிரத் தான் – "மனத்தகத்தான் தலைமேலான்" – அப்பர் – தாண் டகம் VI. 8.5.

9 கொண்டாடுதல் புரியாவருதக்கன் பெருவேள்வி
செண்டாடுதல் புரிந்தான்திருச் சுழியற்பெருமானைக்
குண்டாடிய சமணாதர்கள் குடைச்சாக்கியர் அறியா
மிண்டாடியவது செய்ததுவானால் வருவிதியே. VII – 82–9.

ப – ரை :

கொண்டாடுதல் – மிக ஆடம்பரத்துடன், புரியா – செய்யப்பட்ட, தக்கன் – தக்ஷனது, பெருவேள்வி – பெரிய யாகத்தை, செண்டாடுதல் புரிந்தான் – கோலாகலம் அடையச் சிதற அடித்த, திருச்சுழியற்பெருமானை, குண்டு ஆடிய – கீழ்மைக் குணமுடைய, சமண் ஆதர்கள் – சமண அறிவிலிகளும், குடை – குடை ஏந்தும், சாக்கியர் – புத்தர்களும், அறியா – அறியா வகைக்கு, மிண்டுஆடிய – அது செய்ததுவானால் – மூர்க்கத்தனம் வரும்படி செய்தா ரானால் அங்ஙனம் செய்தது, வருவிதியே – அவருக்கு ஏற்பட்ட தலைவிதியாகும்.

பொ–ரை :

மிக ஆர்ப்பாட்டத்துடன் நடத்தப்பட்ட தக்கனது பெரிய யாகத்தைச் சிதற அடித்த திருச்சுழியற் பெரு மானைக் கீழ்மைக் குணத்துச் சமண அறிவிலிகளும், குடை ஏந்திய புத்தரும் அறியா வகையில் எதிர்த்து வாதம் புரிகின்றார் என்றால் அது அவரது தலைவிதியாம் என்க.

கு–ரை :

"தக்கன் தன் வேள்வியைச் செண்டதாடியதேவர் அகண்டன்" அப்பர் – ஆரூர் V–77. குண்டன் – இழிந் தோர். "குண்டமணர்" சம்பந்தர் – வீழிமிழலை III 80–10.

குடை ஏந்துதல் – "பெரியவாகிய குடையும்" சம்பந்தர் – மறைக்காடு II 916!0.

10 நீரூர்தரு நிமலன்திரு மலையார்க் கயல்அருகே
தேரூர்தரும் அரக்கன் சிரம்நெரித்தான் திருச்சுழியல்
பேரூரென வுறைவானடிப்பெயர் நாவலர் கோமான்
ஆரூரன தமிழ்மாலைபத் தறிவார்துய ரிலரே VII 82–10

ப-ரை :

நிமலன் – நிமலமூர்த்தி உடைய (சிவனுடைய) நீரூர் தரு – ஊற்றருவி பாயும், திருமலையார்க்கு – கயிலை மலை யாருக்கு, அயலருகே – மிக அருகில் (சமீபத்தில்) தேர் ஊர் தரும் அரக்கன் – தேரூர்ந்து சென்ற இராவணனது, சிரம் – தலையை, நெரித்தான் – நெரித்தவனும், திருச் சுழியலை, பேரூரென – தனக்குச் சிறந்த தலைநகராகக் கொண்டு, உறைவான் – உறைபவனும் ஆன, (சிவனது) அடிபெயர் – திருவடி உலவுகின்ற (மனத்தை உடைய) நாவலர் கோமான் – திருநாவலூர்த் தலைவனும், ஆரூரன் – ஆரூரனுடைய, தமிழ்மாலை – தமிழ்ப்பாட்டு, பத்து – பத்தும், அறிவார் – அறிந்து ஓதுபவர், துயர்இலர்-துயர் இலராவர்.

பொ-ரை :

நீரருவி பாயும் தமது திருமலைக்கு அருகே தேர் ஊர்ந்து வந்த அரக்கன் – இராவணனது சிரத்தை நெரித் தவனும், திருச்சுழியலைத் தமது பேரூராகக் கொண்டு உறைபவனுமான சிவனது திருவடியைச் சிந்தை செய்யும் திருநாவலூர்த் தலைவன் ஆரூரனது தமிழ்ப்பாக்கள் பத்தையும் அறிபவர் துயரிலர்.

கு-ஙா :

பேரூர்–சிறந்த பெரிய ஊர். அடிபெயர்–அடிபெயரும் அடிஅசையும், பெயராக – "நாவலர் கோமான்" "ஆரூரான்" என்பன கொண்டவனும் – என்பதுமாம். உறைவானது அடியையும் பெயரையும் (திருநாமத்தை

யும்) உள்ளத்தில் கொண்ட நாவலர் கோமான் – எனவும் கொள்ளலாம். மாலை – பாட்டு. "தமிழ் மாலை பத்தும் நினைவார்" – சம்பந்தர் – திருநறையூர் II 87–11.

பின்குறிப்பு :

ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான் பெருமாள் நாயனருடன் திருவிராமேச்சுரம் பணிந்து அங்கிருந்தே திருக்கேதீச்சரத்தைப்பாடிப் பிறபதிகளையும் வணங்கிக் கொண்டு திருச்சுழியலையடைந்து தொழுது பாடியது இத் திருப்பதிகம் (பெரிய புராணம் – கழறிற். பு – 111) சில பதிப்புக்களில் இப்பதிகத்தின் பண் நட்டராகம் என்று பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. நட்டபாடைபண்; நாட்டை ராகம். இப்பதிகத்திற்கும், இங்கிருந்து ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடிச் சென்ற "தொண்டரடித் தொழல்" என்ற பதிகத்திற்கும் பெரிய புராண உரையாசிரியர் சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள் விரிவுரை எழுதித் தந்துள்ளார்கள். அது அடுத்து வெளி யிடப்படும்.

ஸ்ரீ மாணிக்கவாசகப்பெருமான் அருளிய
திருக்கோவையார்.

## 26 - உழையரியற் பழித்தல்

உழையரியற்பழித்தல் என்பது தோழி தலைமகனை யியற்பழித்துக் கூற நிற்பக்கேட்டு, தன்மாட்டன்புடை நெஞ்சத்தையுடைய விவள் பேதுற இதற்குப் பரியாமை யின் வயலூரன் வரம்பிலனென உழையர் அவனை யியற் பழித்துக் கூறுநிற்றல். அதற்குச் செய்யுள் —

அன்புடை நெஞ்சத்திவள்பேதுற அம்பலத் தடியார்
என்பிடை வந்தமிழ் தூறநின்றுடியிருஞ் சுழியல்
தன்பெடை நையத் தகவழிந்தன்னஞ் சலஞ்சலத்தின்
வன்பெடை மேல்துயிலும் வயலூரன் வரம்பிலனே. — 377

அரத்தவேல் அண்ணல் பரத்தையிற்பிரியக்
குழைமுகத்தவளுக் குழையருரைத்தது.

இதன் பொருள் – அடியார் என்பிடை அமிழ்து வந்து ஊற – அடியவரென்புகளிடையே அமிழ்தம் வந்தூற, அம்பலத்து நின்றாடி இருஞ்சுழியல் – அம்பலத்தின் கண்ணே நின்றாடுவானது பெரிய சுழியலின்கண், தன் பெடை நையத்தகவு அழிந்து – தன்பெடை வருந்தத் தகுதிகெட்டு, அன்னம் சலஞ்சலத்தின் வன்பெடைமேல் துயிலும் – அன்னஞ் சலஞ்சலத்தினது வலிய பெடைமேற் கிடந்துறங்கும், * வயல் ஊரன் – வயலாற் சூழப்பட்ட ஊரையுடையவன், அன்புடை நெஞ்சத்து இவள் பேதுற – தன் மாட்டன்புடைய நெஞ்சத்தையுடைய இவள் மயங்காநிற்ப இதற்குப்பரியாமையின், வரம்புஇலன் – தகவிலன் எ – று.

அன்புடை நெஞ்சத்திவளென்றதனால் பரத்தையரதன் பின்மை கூறப்பட்டதாம். இருஞ்சுழியலூரெனவியையும் சுழியலென்பது ஒரு திருப்பதி. வன்பெடையென்றதனாற் பரத்தையரது வன்கண்மை விளங்கும். ஒரு சொல் வருவியாது பேதுறுதலான் வரம்பிலனென்றுரைப்பாருமுளர். உள்ளுறையுவமம் வெளிப்பட நின்றது. இவையிரண்டற்கும் மெய்ப்பாடு. அழுகையைச் சார்ந்த நகை. பயன்: தலைமகனை யியற்பழித்துத் தலைமகளை யாற்றுவித்தல். சலஞ்சலம் – சங்கு; இது வலம்புரிச்சங்கு ஆயிரம் தன்னைச் சூழ்ந்து விளங்கும் சங்கு.

இது பேராசிரியர் உரை.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருநாட்டுத் தொகை
பண்: இந்தளம்

தென்னூர் கைம்மைத் திருச்சுழியல் திருக்கானப்பேர்
பன்னூர் புக்குறையும்பர மர்க்கிடம் பாய்நலம்
என்னூரெங்கள் பிரானுறை யுந்திருத் தேவனூர்
பொன்னூர் நாட்டுப் பொன்னூர் புரிசை நாட்டுப்
புரிசையே 6

---

* திருச்சுழியலுக்கு வயலூர் என்றபெயரும் உண்டு.
"இந்துசேகரனூர் வயலூரிதுவென்று" — தலபுராணம்.

## 31. திரு இடையாற்றுத் தொகை

பண் : கொல்லி

சுற்றுமூர் சுழியல் திருச்சோபுரந் தொண்டர்
ஒற்றுமூரொற்றியூர் திருவூறலொழியாப்
பெற்றமேறி பெண்பாதியிடம் பெண்ணைத் தெண்ணீர்
எற்றுமூ ரெய்தமான் யிடையாறிடை மருதே 2

திருநாவுக்கரசு சுவாமிகள் காப்புத் திருத்தாண்டகம்

திருநீர்ப் புனற்கெடில வீரட்டமுந்
திருவளப்பூர் தெற்கேறு சித்தவடம்
வருநீர் வளம்பெருகு மாநிருபமும்
மயிலாப்பின் மன்னினூர் மன்னியேத்தும்
பெருநீர் வளர்சடையான் பேணி நின்ற
பிரமபுரஞ் சுழியல் பெண்ணாகடம்
கருநீல வண்டரற்றுங் காளத்தியுங்
கயிலாயந்தம்முடைய காப்புக்களே! 12

பெரிய புராணம்

பற்றார்தம் புரங்கண்மலைச் சிலையாற் செற்ற
பரமனூர் திருப்புத்தூர் பணிந்து போந்து
புற்றாரும் பணிபூண்ட புனிதனூர்தம்
பூவணத்தைப் புக்கிறைஞ்சிப் புகழ்ந்துபாடிக்
கற்றார்கள் தொழுதேத்துங் கானப்பேருங்
கைதொழுது தமிழ்பாடிச் சுழியல் போற்றிக்
குற்றாலங் குறும்பலாக் கும்பிட்டேத்திக்
கூற்றுதைத்தார் நெல்வேலி குறுகினாரே 886

— திருஞானசம்பந்தர் புராணம்

அங்குறைந்து கண்ணுதலா ரருள் சூடியகன்று போய்ப்
பொங்கு தமிழ்த்திரு நாட்டுப் புறம்பணை சூழ்நெல்வேலி
செங்கண் விடையார் மன்னுந் திருக்கானப்பேர் முதலா
வெங்குநிகழ் தானங்களெல்லாம் புக்கிறைஞ்சுவார்

— திருநாவுக்கரசு நாயனார் புராணம் 410

திருவிரா மேச்சுரத்துச் செழும்பவளச் சுடர்க்
கொழுந்தைப்
பரிவினுற்றெழுத கன்று பரமர்பதி பிறபணிந்து
பெருவிமானத் திமையோர் வணங்கு பெருந்திருச்சுழியல்
மருவினார் வன்றொண்டர் மலைவேந்தருடன் கூட

திருச்சுழிய லிடங்கொண்ட செம்பொன்மலைச் சிலையாரைக்
கருச்சுழியில் வீழாமைக் காப்பாரைக் கடல்விடத்தின்
இருட்சுழியு மிடற்றாரை யிறைஞ்சியெதி ரிதழிமலர்ப்
பருச்சுழியத் துடனானுயுயிரெனும்பா மலர் புனைந்தார்.

அங்கணரைப் பணிந்துறையு மாரூரர்க் கவ்வூரிற்
கங்குலிடைக் கனவின்கட் காளையாந்திரு வடிவாற்
செங்கையினிற் பொற்செண்டுந் திருமுடியிற் சுழியமுடன்
எங்குமிலாத் திருவேட மென்புருக முன்காட்டி

கானப்பேர் யாமிருப்ப தெனக்கழறிக் கங்கையெனும்
வானப் பேராறுலவு மாமுடியார் தாமகல
ஞானப் பேராளருணர்ந் ததிசயித்து நாதருடன்
ஏனப் றெயிரணிந்தா ரருளிருந்த பரிசென்பார்

கண்டருளும் படிகழறிற் றறிவார்க்கு மொழிந்தருளிப்
புண்டரீகப் புனற்சுழியற் புனிதர்கழல் வணங்கிப்போய்
அண்டர்பிரான் றிருக்கானப் பேரணைவா ராரூரர்
தொண்டரடித் தொழலுமெனுஞ் சொற்பதிகத்
தொடைபுனைவார்

— சேரமான் பெருமாணாயனார் புராணம் 110 to 114

உமாபதி சிவாசாரியார் அருளிய திருப்பதிகக் கோவை

ஆலவா யாப்பனூர் பரங்குன்றே டகத்தோ
டருங்கொடுங்குன் றந் திருப்புத்தூர் புனவாயிலினோ
டேலுமிரா மேச்சர மாடானை காணப்பே
றெழிற்றிப்பூவணக்கு சுழியலின்புறு குற்றாலம்
பாலலோசனன் றிருநெல்வேலியோடு
பாண்டி பதினான்கு மலைநாட்டிலஞ்சைக்கள மொன்றே
சீலமிகு மவிநாசி திருமுருகன் பூண்டி
திருநணா கொடிமாடச் செங்குன்றூர்தானே ! 10

உமாபதி சிவம்அருளிய திருப்பதிக்கோவை

திருவாரூர்ப் பரவையுண்மண் டளிசாத்தமங்கை
சிற்றேமந் தெளிச்சேரி திருவுசாத்தானங்
கரவிரந் திருவாலம்பொழில் வெண்ணெய்நல்லூர்
கச்சியனேக தங்காவதங் கோடிக்குழக
ரரசிலி தென்குடித்திட்டை வடமுல்லைவாயி
லம்பர்ப் பெருந்திருக்கோயில் வெண்பாக்கஞ்
சுழியல்
பெருமணமிந்திர நீலபருப்பதம் வேற்காடு
பேரெயில் பாற்றுறைமூக்கீச் சரமுண்டீச்சரமே!
— 6.

"தேவி —

துணைமாலை யோர்டும் சுழியனகர் மேவும்
இணையார் திருமேனி யீசா!

— சிவக்ஷேத்திர சிவநாமக்கவி வெண்பா
(உமாபதி சிவம்)

முதியவர்மூவர் தமிழ்கொள் சுழியல் மூதிரநெல்லை
துதிசெய் பரங்குன்றமாடானை காளையார் தூவாப்பனூ
ரெதிர்கொடுங்குன்று புனவாயில் பூவண மேடகமே
மதுரைகுற்றால மிராமேசம் பாண்டியன் மண்டலமே!

— பாண்டி மண்டலசதகம்
(மதுரை ஐயம்பெருமாள் ஆசிரியர்)

மற்றும் பாண்டியநாட்டுத் தலபுராணங்களிலும் பிற்காலப் பிரபந்தங்களிலும் சுழியற் பெருமையைக் காணலாம்.



# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 20 | ஞானசிரியரால் | ஞானுசிரியரால் |
| 4 | 24 | அமண | அமண். |
| 3 | 8 | பனிரெண்டாம் | பன்னிரெண்டாம் |
| 9 | 21 | திருக்காளாத்தி | திருக்காளத்தி |
| 13 | 4 | பிதிர் கடன் | பிதிர்க்கடன் |
| 14 | 14 | காண்பதும் | காண்பது |
| " | " | கபத்தடி | கம்பத்தடி |
| 15 | 29 | வாயல் | வாயில் |
| " | " | விசுவநாதர் | பிசுவநாதர், விசாலாட்சி |
| 18 | 28 | னறித்து | னறிந்து |
| 20 | 11 | மண்ணை | மண்ணைத் |
| 21 | 25 | சுமார் 1920 ஆண்டாகும் | 1901ஞு ஐப்பசியீ ஆகும் |
| 30 | 14 | மண்டபங்கள் | 12 மண்டபங்கள் |
| 31 | 24 | வெள்ளையன்சேர்வை | முத்திருளாயி அம்மாள் |
| 45 | 13 | புஞ்சை 40 | புஞ்சை 40 குருக்கம் |
| 48 | 4 | (In Remarkes) A chaneri | Soocheneri |

மற்றும் பிழைகளையும் குறியீடுகளையும் ஆங்காங்கு தக்கவாறு திருத்திக் கொள்க.

உ

**சைவ சமய மாண்பை அறிவதற்கு முதலில் கற்றுணர வேண்டியதும், அடிப்படையான தெளிந்த அறிவைத் தருவதுமான நூல்கள்.**

| | |
|---|---|
| சிவாலய தரிசன விதி | 0 — 20 |
| இரண்டாஞ் சைவ வினு—விடை | 0 — 75 |
| சைவ பூஷண சந்திரிகை | 0 — 50 |
| நான்காம் பால பாடம் | 1 — 75 |
| பெரிய புராண சூசனம் | 0 — 75 |
| சிவ, க்ஷேத்திர, ஆலய, மகோத்ஸவ உண்மை விளக்கம் | 0 — 75 |
| மகோற்சவ விளக்கம் | 0 — 75 |
| சைவ தூஷண பரிகாரம் | 0 — 50 |
| சிவ - சங்கர பண்டிதர் பிரபந்த திரட்டு | 1 — 00 |
| சிவஞானத் தெளிவுபதேசத்திரயம் | 0 — 60 |
| சமயாசாரியர் சந்தானசாரியர் சரித்திர சங்கிரகம் | 0 — 50 |
| ஸ்ரீ ஆறுமுக நாவலர் சரித்திரம் உரை நடை | 1 — 50 |
| சைவ சமய சாரம் | 0 — 40 |
| சைவ சமய நெறியுரை | 1 — 75 |

(விலைகள் மாறுதலுக்குட்பட்டது)



*சிவாசாரியக் குழந்தைகளும், பெரியோரும், அதிகாரிகளும், சிப்பந்திகளும், ஏனையோரும் கற்றற்குரியன. இதன்பின் விரிந்த நூல்கள் கற்றற்குரியன.*



கிடைக்குமிடம் :—

**ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் அச்சகம்,**
300, தங்கச்சாலைத் தெரு,
*சென்னை - 1.*

உ

## அடுத்து வெளியிட இருப்பவை :—

1. திருச்சுழியல் தேவாரப் பதிகங்கள் :

   பெரிய புராண உரையாசிரியர் சிவக்கவிமணி
   சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள் எழுதிய விரிவுரையுடன்

2. திருச்சுழியற் கொம்பிலா வெண்பாவந்தாதி :

   தி. சு. கோவிந்தசுவாமி குறிப்புரைகளுடன்

3. திருச்சுழியல் வெண்பாவந்தாதி :

   P. R. கிருஷ்ணமாசாரியர் உரையுடன்

4. திருச்சுழியற் புராணம் :

   ஆராவ முதாசாரியார் இயற்றியது முதற்பதிப்பைத் தழுவி ஆராய்சியுடன்.

விஜயா பிரிண்டர்ஸ், மதுரை-68.